# மூன்று விநாடி முகம்

விவேக் ரூபலா



ராஜேஷ்குமார்

மின்நூல் ஆக்கம்

# தமிழ்நேசன்

# மூன்று விநாடி முகம்

---

## 1



**"தே**ஜ்...!"

"ம்...

"ரெடியா...?"

"நான் ரெடியாகி பதினஞ்சு நிமிஷமாகுது...

"சொன்னதெல்லாம்...?"

"ஞாபகம் இருக்கு...

"காரியத்தைத் துல்லியமா முடிக்கணும்...

"அது என்னோட கவலை...

"காரியம் முடிஞ்சதும் நேரா முந்திரித் தோப்பு பங்களா வுக்குப் போயிடு...! என்னை போன்ல காண்டாக்ட் பண்ற வேலை வேண்டாம்...

"ஏற்கெனவே சொன்னதுதானே...? நான் கிளம்பட் டுமா...?"

"ம்... கிளம்பு... குறி மார்புக்கு வை. தலைக்கு வைக்காதே..!"

தேஜ் என்கிற அந்த இருபத்தைந்து வயது இளைஞன் ஒரு ப்ரீப் கேஸை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான். காலை நேர சென்னை. எட்டு மணி. ஜனங்கள் பல்லவன்களில் அடைபட்டு - கோஷ்டி கோஷ்டியாய் போய்க் கொண்டிருந் தார்கள்.

எலக்ட்ரிக் ட்ரெயின்கள் 'தடக் தடக்'கென்று தண்டவாளங் களில் நொண்டின. காலை நேரக் காற்றில் வாகனங்கள் வெளித் தள்ளிய கரியமில வாயு நிதானமாய்க் கலந்து கொண் டிருந்தது.

தேஜ் தன் ஆர்.எக்ஸ். பைக்கை உதைத்து புகை கக்கி வேகம் பிடித்தான். மவுண்ட் ரோட்டின் மெகா ட்ராஃபிக்கில் கலந்து ஒரு தீர்க்கமான வேகத்தில் பயணம் செய்து கிண்டியின் விளிம்பைத் தொட்டான்.

தேஜ் நல்ல உயரம். அணிந்திருந்த ஸ்டோன்வாஷ் சர்ட் பேண்ட்டுக்குள் அவனுடைய தேகாப்பியாச உடம்பு தெரிந்தது. முகத்திற்கு பவுடர் அடித்த மாதிரி நிறம். பிடரி வழிய முடி. அடர்த்தியான புருவங்களுக்கு கீழே சின்னக் கண்கள். சற்றே தூக்கலான மேலுதட்டுக்கு மேல் சிரத்தையாய் எண்ணெய் தடவி வளர்த்த மீசை. அன்றைய சவரத்தில் ரோமம் இல்லாத மோவாய்.

தேஜ் இப்போது கிண்டி ரோட்டில் ஆர்.எக்ஸ் பைக்கை விரட்டிக் கொண்டிருந்தான். பைக்கில் போகப் போகவே

இடது கை சர்ட் பாக்கெட்டுக்குப் போய் - ஒரு சிகரெட்டை எடுத்தது. உதட்டுக்கு கொடுத்தது. பின் அதே சிகார் லைட்டரை எடுத்து - பெருவிரலால் தட்டி ஒரு நெருப்பு ஜுவாலையை உற்பத்தி செய்து - சிகரெட் அந்த ஜுவாலையில் தலை முழுக - முதல் புகை கசிந்தது.

ஐந்து நிமிஷ பயணம்.

சிகரெட்டின் பாதி உடம்பு மிச்சமிருக்க - பைக்கின் வேகத்தைக் குறைத்து - சாலையோரமாய் இருந்த - ரெஜியா மரத்துக்குப் பின்னால் கொண்டு போய் நிறுத்தினான்.

சற்று மரங்கள் அடர்ந்த வேண்டாத நிசப்தத்தோடு கூடிய சூழ்நிலை. பைக்கை லாக் செய்து ப்ரீப்கேஸை எடுத்துக் கொண்டு - மிச்ச சிகரெட்டைப் புகையாக மாற்றியபடி நடந்தான்.

சாலையோர நடை.

ஒரு நிமிஷ நடை.

ரோட்டின் வலது பக்கம் தெரிந்த வெல்ஃபேர் அசோசியேஷன் ஹால் கட்டிடத்திலிருந்து யாரோ மைக்கில் பேசுவது காற்றில் கலந்து கேட்டது.

''சட்டம் வேறு செயல்முறை வேறு என்ற கோணத்தில் தான் நம் நாட்டிலே விஷயங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. மனித உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டியவை என்ற உணர்வு சட்டத்துக்கு எப்போதும் உண்டு. சுதந்திரம் அதிகார வர்க்கமாக செயல்படும்போது சட்டம் அங்கே நுழைந்து தன் வேலையைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் தான் அது சட்டம். தங்கள் சுதந்திரத்தை தவறாகப் பயன்படுத்துபவர்கள் இந்த நாட்டுக்கு புற்றுநோயைப் போன்றவர்கள். இப்பேர்ப்பட்ட புற்றுநோய் ஆட்களை வளர விடுவதும், சரியான நேரத்தில் தடுக்காமல் விடுவதும் நாட்டுக்கே கேடு

விளைவிப்பதாக முடியும். யார் தவறு செய்தாலும் சட்டம் தட்டிக் கேட்க வேண்டும்.''

தேஜ் கையிலிருந்த சிகரெட்டை வீசிவிட்டு பேச்சை காதில் வாங்கிக் கொண்டே நடந்தான்.

மைக்கில் இப்போது குரல் அதிகப்பட்டது.

''சட்டத்தை தன் கையில் எடுத்துக் கொண்டு செயல்படும் சதிகாரர்களை தக்க தருணத்தில் நாம் தண்டிக்கவில்லையென்றால் கோர்ட் என்கிற அமைப்பு எதற்கு...? நீதிபதி... என்கிற பதவி எதற்கு? நீதித்துறையிலே இருப்பவர்கள் அரசியல்வாதிகளின் அரவணைப்புக்கும் அவர்கள் கொட்டும் பணத்திற்கும் மசிந்து நீதி தேவதையை சோரம் போகச் செய்யும் இந்தக் காலத்தில் ஹைகோர்ட் நீதிபதி வாத்சல்யன் அவர்கள் துணிச்சலாய் ஒரு தீர்ப்பை வழங்கியிருக்கிறார்கள். யாருடைய மிரட்டலுக்கும் பணியாமல் எதற்கும் தலை வணங்காமல் - ஒரு தீவிரவாத கும்பலைச் சேர்ந்த பதினோரு பேருக்கு தூக்கு தண்டனை விதித்து தீர்ப்பு வழங்கியுள்ளார். அந்த தீவிரவாதிகளின் வழக்கை விசாரித்து - தீர்ப்பு வழங்க - மற்ற நீதிபதிகள் மறுத்துப் பின் வாங்கியபோது வாத்சல்யன் அவர்கள் முன் வந்தார்கள்.''

தேஜ் அந்தக் கட்டிடத்திற்கு எதிர்ப்புறமாய் வைக்கப் பட்டிருந்த அந்த எழுபது அடி உயர கட் - அவுட்டுக்குப் பக்கத்தில் வந்தான். ஒரு அரசியல் தலைவர் கட் - அவுட் அது. மூன்று மாதங்களுக்கு முன்னால் அந்தத் தலைவரின் பிறந்த நாள் கொண்டாடப்பட்டபோது - வைக்கப்பட்ட கட்-அவுட். இரண்டு கைகளையும் தலைக்கு மேல் உயர்த்தி கும்பிடு போடுகிற போஸில் நின்றிருந்த அவர் சமீபத்திய மழைக்கு சாயம் போயிருந்தார். அடித்த காற்றுக்கு உடம்பில் இரண்டு மூன்று இடங்களில் பொத்தல்கள்.

தேஜ் கட்-அவுட்டுக்கு பின் பக்கம் வந்தான். மரங்கள் அடர்ந்து ஒருவித செயற்கை ஆசிட்டோடு தெரிந்தது.

கட்-அவுட்டை தாங்கிப் பிடித்திருந்த - ராட்சஸ மூங்கில் சாரத்தை ஏறிட்டான். நூற்றுக்கணக்கான மூங்கில்கள் - தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டு - ஒரு டவர் மாதிரி தெரிந்தது.

தேஜ் சுற்றும் முற்றும் பார்த்தான்.

ஆட்கள் யாரும் இல்லை.

ப்ரீப்கேஸை இடது கையால் பற்றிக் கொண்டு - மூங்கில் சாரங்களின் மேல் காலை வைத்து - சரசரவென்று ஏறினான். இரண்டு நாட்களுக்கு முன்பு வந்து இந்த சாரத்தின் மேல் ஏறி ப்ராக்டீஸ் செய்ததில் இப்போது ஏறுவது சுலபமாய் இருந்தது.

''க்க்ர்ர்ர்... க்ர்ர்ர்...

சில மூங்கில்கள் மட்டும் தேஜின் கனத்தைத் தாங்கிக் கொள்ள சக்தியின்றி கதறின.

தலைவரின் இடுப்புக்கு வந்தான். தெரிந்த ஒரு பொத்தலில் தலையை வைக்க எதிர்பக்க கட்டிடத்தின் சிறிய மைதானம் ஒருவித விழாக் கோலத்தோடு தெரிந்தது.

தேஜ் இன்னும் ஏறினான்.

தலைவரின் விலா பகுதிக்கு வந்து கிழிபட்ட பொத்தலில் பார்வையைப் போட - மேடையும் உட்கார்ந்திருக்கிற ஆட்களும் தெரிந்தார்கள். மேடையில் ஒரு நாயகமாய் பிரின்ஸ் நாற்காலியில் நீதிபதி வாத்சல்யன் உட்கார்ந்திருந்தார். நெடிய உருவம். வழுக்கை மண்டை பிரகாசித்தது. தீட்சண்யம் மிக்க கண்களை வெள்ளி பிரேமிட்ட கண்ணாடி கவ்வியிருந்தது. மழித்த முகம். கருநீல ஓவர் கோட்டில் பிடிப்பாய் தெரிந்தார்.

தேஜ் அவரைப் பார்த்துக் கொண்டே - மூங்கில் சாரத்தின் மேல் வசதியாய் உட்கார்ந்து கொண்டு ப்ரீப்கேஸைத் திறந்தான்.

உள்ளே -

டெலிவ்யூஃபைண்டரோடு கூடிய - அந்த ஜெர்மனி தேச துப்பாக்கி பார்ட் பார்ட்டாய் தெரிந்தது. மிகக் கவனமாய் ஒவ்வொன்றாய் எடுத்துப் பொருத்த ஆரம்பித்தான்.

இரண்டே நிமிடம்...!

டெலி வ்யூ ஃபைண்டர் துப்பாக்கி - வயிறு நிறைய தோட் டாக்களை நிரப்பிக் கொண்டு - ட்ரிக்கரில் கை பட்டு தோட் டாக்களை உமிழத் தயாரானது.

தேஜ் துப்பாக்கியை தோளில் ஒரு குழந்தையைப் போல் சாத்திக் கொண்டு - சுற்றும் முற்றும் - பார்வையைத் துரத்தினான்.

அவனைப் பார்க்கக் கூடிய சாத்தியத்தில் ஆட்கள் யாருமே இல்லை. ரோட்டுக்கு எதிர்ப்புறம் இருந்த கட்டிட வாசலில் மட்டும் கூட்டம். வெகு சொற்பமாய் போலீஸ்.

மைக்கில் குரல் வந்து கொண்டிருந்தது.

''நம் நாட்டில் ஒரு அரசியல்வாதி அவன் எத்தகைய குற்றத்தை செய்திருந்தாலும் பதவியில் இருப்பவர்களைப் பயன்படுத்தி - அந்தக் குற்றத்திலிருந்து தப்பித்து விடுகிறான். இந்திய வரலாற்றில் எந்த ஒரு அரசியல்வாதியும் தான் புரிந்த ஊழல்களுக்காகவோ... செய்த சட்ட விரோத காரியங் களுக்காகவோ... சட்டத்தின் மூலம் தண்டிக்கப்பட்டதே கிடை யாது... ஒரு சாமானியன் ஒரு பஸ்ஸில் பிக்பாக்கெட் அடித் தால் கூட சட்டம் அவனைக் கடுமையாய் பார்க்கிறது. சட்டம் இப்படி பாரபட்சமாய் செயல்படலாமா...? திரு. வாத்சல்யன் போன்ற நீதிபதிகள் இந்த அவல நிலையை மாற்ற முன்வர வேண்டும்... தீவிரவாதக் கும்பலைச் சேர்ந்த பதினோரு பேர்க்கு அவர் துணிச்சலாய் தூக்கு தண்டனை வழங்கியது போல் அரசியல்வாதிகள் சம்பந்தப்பட்ட வழக்குகளிலும் அவர் இதே துணிவோடு தீர்ப்புகளை வழங்க வேண்டும்.''

கைதட்டல் எழுந்து அடங்கியது.

தேஜ் கட்அவுட் தலைவரின் விலா பகுதியில் தெரிந்த பொத்தலில் தலையை நுழைத்து துப்பாக்கியின் வ்யூ ஃபைண்டர் லென்ஸில் கண்ணைப் பதித்து நீதிபதி வாத்சல் யனைக் குறிபார்த்தான்.

லென்ஸில் வாத்சல்யனின் வழுக்கைத்தலை கிட்ட தெரிந்தது. பார்வையைக் கீழே தாழ்த்தினான்.

நெற்றி.

கண்ணாடிக்குள் கண்கள்.

பெரிய மூக்கு.

முகத்திற்கு குறி வைக்கக்கூடாது. குறி கொஞ்சம் பிசகி னாலும் திட்டம் பாழ்.

பார்வையை இன்னும் இறக்கினான்.

மார்பின் விசாலம் கிடைத்தது. அணிந்திருந்த கருநீல கோட்டின் பட்டன்கள் வீடியோ காமிரா வெளிச்சத்தில் மின்னின.

துல்லியமாய் குறி பார்த்தான்.

மைக்கைப் பிடித்திருந்த ஆசாமி பேசிக் கொண்டிருந்தார். ''ஐந்தாயிரம் கோடி ரூபாய்க்கு ஊழல் செய்தால்கூட ஒரு பெரிய இடத்து புள்ளியாக அவன் இருந்தால் தண்டனையி லிருந்து தப்பி விட முடிகிறது. ஆனால் தாலுகா ஆபீஸ் ப்யூன் இல்லாத கொடுமைக்காக ஐம்பது ரூபாய் லஞ்சம் வாங்கினால் அவனை இந்த அரசாங்கம் வேலை நீக்கம் செய்கிறது. இது எந்த வகையில் நியாயம்...? இந்தியாவின் சட்ட திட்டங்கள் மாற்றப்பட வேண்டும். அல்லது நீதியைக் காக்கும் பொறுப்பில் இருப்பவர்கள் துணிச்சலோடு செயல்பட வேண்டும். அத் தகைய துணிச்சலுக்கு முன்னோடியாக விளங்குபவர் நீதிபதி திரு. வாத்சல்யன் அவர்கள்...

தேஜ் ட்ரிக்கரில் ஆட்காட்டி விரலை வைத்தான். வாத்சல்யன் இப்போது பக்கவாட்டில் சாய்ந்து - யாருடனோ பேச - அவர் பழைய நிலைக்கு வர தேஜ் காத்திருந்தான்.

வீடியோ கிராபர்கள் சுற்றி சுற்றி வந்தார்கள். மேடை முழுக்க வெளிச்ச மழை.

நீதிபதி வாத்சல்யன் பழைய நிலைக்கு வர - துப்பாக்கியின் வ்யூஃபைண்டரில் அவருடைய மார்பு துல்லியமாய் கிடைத்தது.

தேஜ் சுடத் தயாரானான்.

## 2



**கோ**வை.

கலாக்ஸி லிமிடெட் கம்பெனியின் ஐந்தாவது மாடி. அட்மினிஷ்ட்ரேஷன். சென்ட்ரலைஸ்ட் ஏ.ஸி.யின் குளிர் அந்த செக்ஷன் பூராவும் பரவியிருந்தது. மெலிதாய் ஏதோ செண்ட் வாசனை. லிப்ஸ்டிக் பூசி கொண்டைகளை உயர்த்திப் போட்ட பெண்கள் எலக்ட்ரானிக் டைப்ரைட்டர்களில் கவன மாய் இருக்க ஒரு டெலிபோனில் கான்வர்சேஷனில் ஈடு பட்டிருந்தான் கதிர்.

"வெரி... வெரி... ஸாரி ஸார்... நாங்க டைரக்டா யார்க்குமே மெட்டீரியல்ஸை சப்ளை பண்றதில்லை... எல்லாமே த்ரூ. பேங்க்தான்... உங்களுக்கு இஷ்டமிருந்தா ஆர்டர் பண்ண லாம்..."

''மத்த கம்பெனிகள் சப்ளை பண்ணினா தாராளமா நீங்க வாங்கிக்கலாம்... எங்களுக்கு அதைப்பத்தி கவலையே கிடையாது...

''ஜி.எம்.கிட்டே பேசணுமா...? நீங்க யார்கிட்டே பேசினாலும் இதே பதில்தான்...''

''வீணா பேசி நேரத்தை வேஸ்ட் பண்ணாதீங்க ஸார்... எனக்கு தலைக்கு மேல வேலை கிடக்கு... ரிஸீவரை நீங்க வெக்கறீங்களா...? நான் வெக்கட்டுமா...?''

''உங்க கிட்டே பேசி பிரயோஜனம் இல்லை... ரிஸீவரை நானே வெச்சுடறேன்...'' சொன்ன கதிர் ரிஸீவரை தட்டென்று வைத்துவிட்டு - சட்டைப் பையில் இருந்த கர்ச்சீப்பை எடுத்து நெற்றியில் துளிர்த்திருந்த வியர்வையை ஒற்றிக் கொண்டான். ''காலங்கார்த்தால... நல்ல இழுவை பார்ட்டி... சே...!''

பார்த்துக் கொண்டிருந்த ஃபைலைப் புரட்ட

''ஸார்..

குரல் கேட்டுத் திரும்பினான்.

எதிரில் அட்டெண்டர் ராமமூர்த்தி.

''என்ன...?''

''எம்.டி. உங்களைக் கூப்பிட்டார் ஸார்...

நெற்றியின் மையத்தில் திடுக்கிட்டான் கதிர். தொண்டைக் குழி அவசரமாய் எச்சில் விழுங்கியது.

''ஜி.எம். கூப்பிட்டாரா... எம்.டி. கூப்பிட்டாரா...?''

''எம்.டி. ஸார்...

கதிர்க்கு ஆச்சர்யமாயிருந்தது. அவன் இந்தக் கம்பெனியில் வேலைக்கு சேர்ந்து இரண்டு வருஷ காலமாகிறது. எம்.டி. பாலகங்காதரனை மூன்று தடவையோ... நான்கு தடவையோ தான் பார்த்திருக்கிறான். அவர் கம்பெனிக்கு எந்த நேரத்தில் வருகிறார்... எந்த நேரத்தில் வெளியே போகிறார் என்பது யார்க்கும் தெரியாது. கம்பெனியில் வேலை செய்பவர்கள் யார் எதைச் சொல்வதாக இருந்தாலும் ஜி.எம்.மைப் பார்த் துத்தான் சொல்ல வேண்டும்.

''ஆனால்... இப்போது... எம்.டி.யே கூப்பிடுகிறாரே...?''

''எதற்காக இருக்கும்...?''

வாய் உலர்ந்து போயிருக்க - அட்மினிஸ்ட்ரேஷன் ஆபீஸைக் கடந்து லிஃப்ட்டை உபயோகித்து எம்.டி.யின் அறை இருக்கும் ஏழாவது மாடியை நோக்கிப் போனான்.

ஏழாவது மாடி வராந்தா பூராவும் மெத்தென்ற நீல வர்ண கார்ப்பெட். சுவர்களில் ஸீனரி போர்ட்ரயிட்கள்.

ஜே.பாலகங்காதரன்.

மானேஜிங் டைரக்டர் ஆஃப் கலாக்ஸி க்ரூப்ஸ், வெண்கல எழுத்துக்கள் கறுப்பு வெல்வெட் துணியின் பின்னணியில் பளபளப்பாய் மின்னியது.

ஃப்ரெஞ்ச் பாலீஸ் செய்யப்பட்ட ரோஸ்வுட் கதவு அடைத் திருந்த எம்.டி.யின் அறைக்கு முன்பாய் போய் நின்றான் கதிர். பயபக்தியாய் - வலது கை ஆட்காட்டி விரலை கொக்கி யாக்கி மெல்லத் தட்டினான்.

''டொக்... டொக்...

''எஸ்.கம்மின்...

கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான் கதிர். உள்ளே காத்திருந்த ஏ.ஸி. குளிர் பிரியமான மனைவியைப் போல் அவனைத் தழுவிக் கொண்டது.

''குட்மார்னிங் ஸார்...

''குட் மார்னிங்... உட்கார்ங்க... கதிர்...'' படித்துக் கொண் டிருந்த ஒரு புத்தகத்தை மூடி வைத்துவிட்டு நிமிர்ந்த பால கங்காதரனுக்கு ஐம்பத்தைந்து வயது. சதைப் பிடிப்பான சதுர முகம். நடு வகிடெடுத்து நரை கிராப்பை நேர்த்தியாய் சீவி யிருந்தார். நெற்றியில் சந்தனப் பொட்டு. பொட்டின் மையத் தில் துளியூண்டு குங்குமம். முழுக்கை வெள்ளை சட்டை யிலும், வேஷ்டியிலும் இருந்தார்.

கதிர் தயக்கமாய் உட்கார்ந்தான். பாலகங்காதரன் அவனைப் புன்னகையோடு ஏறிட்டார்.

''க்வார்ட்டர்ஸ் வசதியா இருக்கா...?''

''இருக்கு ஸார்...

''உங்க மனைவிக்கு போன வாரம் சீமந்தம் நடந்ததாய் கேள்விப்பட்டேன்...''

''ஆ... ஆமா... ஸார்...

''டெலிவரி எங்கே...! இங்கேயா...? இல்லை ஊர்லயா...?''

''ஊர்லதான் ஸார்.. அடுத்த வாரம் கொண்டு போய் விட்டுட்டு வரணும்...

''இந்தக் கம்பெனியில் மெயின்டெயின் பண்ணிட்டு வர்ற 'ஹௌ ஈஸ் ஹி...?' பர்சனல் ஃபைல்ஸ் சிலது என்கிட்டே வந்தது. அதுல நல்ல ரிமார்க்ஸோட இருக்கிற ஃபைல் உங்க ளோடதுதான். கம்பெனிக்கு சரியான நேரத்துக்கு வர்றதும் - வேலைகளைக் குறித்த நேரத்தில் முடிக்கிறதும் கம்பெனி ஸ்டாஃப் யார்கிட்டேயும் அனாவசியமா வம்பு பேசாததும், தனிப்பட்ட வாழ்க்கையில் ஒழுக்கத்தோடு இருக்கிறதும்.. எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு. கம்பெனியில் இருக் கிற ஒவ்வொரு ஸ்டாஃப்பும் உங்களை மாதிரியே இருந்

துட்டா... கம்பெனி இந்திய அளவில் ஒரு பெரிய ஸ்தாபனமா பேர் வாங்கிடும்...''

கதிர்க்குள் சந்தோஷம் கொப்பளித்தாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் அடக்கமாய் புன்னகைத்தான்.

''நான் என்னோட கடமையைத்தான் பண்ணினேன் ஸார். என்னைப் பொறுத்தவரைக்கும் வேலை செய்யற ஸ்தாபனம் பெத்த தாய் மாதிரி...

''இந்த உணர்ச்சி எத்தனை பேர் கிட்ட இருக்கு..? கம்பெனியை சம்பளம் வாங்கற இடமா மட்டும் நினைச்சு... எத்தனை பேர் வேலை வெட்டி செய்யாமே சும்மா வந்துட்டுப் போறாங் கன்னு எனக்குத் தெரியும்...

கதிர் பெருமிதமாய் புன்னகைக்க - எம்.டி. தொடர்ந்தார். ''கதிர்...! உங்க பர்சனல் ஃபைலை பார்த்துட்டு பாராட்ட மட்டும் உங்களை நான் கூப்பிடலை...

''ஸார்...

''தனிப்பட்ட முறையில் உங்களாலே எனக்கொரு காரியம் ஆகணும்...

''சொல்லுங்க ஸார்...

''சொல்றது பெரிசில்லை.. அது வெளியே யார்க்கும் தெரியாமே செஞ்சு முடிக்கணும்...''

''செய்யறேன் ஸார்...

''எனக்கு ஒரு பொண்ணு இருக்கிற விஷயம் உங்களுக்கு தெரியும்ன்னு நினைக்கிறேன்...''

''தெரியும் ஸார்... ஆனா பார்த்தது இல்லை. அவங்க ஏதோ வெளிநாட்டுல தங்கியிருக்கிறதாய் கேள்விப்பட்டேன்...

''என்னோட டாட்டர் வெளிநாட்ல இருக்கிறதாய் இங்கே இருக்கிற எல்லோரையும் நம்ப வெச்சது நான்தான்...''

''அப்படின்னா...!''

''அவ வெளிநாட்ல இல்லை....

''பின்னே எங்கே ஸார்...?''

''மெட்ராஸ்லதான் இருக்கா...

''மெட்ராஸா...?''

''எஸ்...! மெட்ராஸ்ல எங்கே இருக்கான்னு தெரிஞ்சா... உங்களுக்கு ஆச்சர்யமாவும் அதிர்ச்சியாவும் இருக்கும்...

''எங்கே ஸார்...

''ஒரு பிரைவேட் மென்ட்டல் ஹாஸ்பிடலில்...

''ஸ... ஸார்... கதிரின் முகம் ஒரு பலத்த அதிர்ச்சிக்குப் போயிற்று.

பாலகங்காதரன் தொடர்ந்தார். ''ரெண்டு வருஷத்துக்கு முன் பிக்னிக் போன இடத்தில் என்னோட டாட்டர் கபிலா ஒரு சின்ன ஆக்ஸிடெண்ட்ல மாட்டி தலையில் அடிபடப் போய் - அவளோட மனநிலை பாதிக்கப்பட்டது. கபிலாவுக்கு மன நிலை சரியில்லைன்னு தெரிஞ்சதுமே அவளை உடனே யார்க்கும் தெரியாமே மெட்ராஸுக்கு கூட்டிட்டுப் போய் எனக்குத் தெரிஞ்ச ஒரு டாக்டர் நடத்தும் மென்ட்டல் ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணிட்டேன். கடந்த ரெண்டு வருஷ காலமும் கபிலாவுக்கு அந்த ஹாஸ்பிடல்ல ட்ரீட்மெண்ட் எடுத்து அவளை முழுமையாக குணப்படுத்திட்டார் அந்த டாக்டர். கபிலா நாளைக்கு டிஸ்சார்ஜ் ஆகறா. நீங்க மெட்ராஸுக்குப் போய் கபிலாவைக் கூட்டிட்டு வரணும்...

கதிரின் முகம் மறுபடியும் அதிர்ச்சிக்குப் போயிற்று.

''நா.. நா.... போய்... கூ... கூட்டிட்டு... வர... வரணுமா... ஸார்?''



# 3



கட் அவுட்டுக்கு பின்பக்கமிருந்து - நீதிபதி வாத்சல்யனை துல்லியமாய் குறி பார்த்து இனி சுடலாம் என்கிற தயார் நிலைக்கு வந்தபோது - மைக்கைப் பிடித்துப் பேசிக் கொண் டிருந்த நபர் பேச்சை முடித்துக் கொண்டு நாற்காலிக்கு திரும்ப கூட்டத்தின் தலைவர் எழுந்தார்.

வாத்சல்யன் மறைக்கப்பட தேஜ் ஆயாசமாய் வ்யூ ஃபைண்டரிலிருந்து கண்ணை எடுத்து - மூங்கில் சாரத்துக்கு சாய்த்தான்.

ஒலிபெருக்கியில் குரல் கேட்டது.

''அடுத்தபடியாக அரிமா சங்கத் தலைவர் கனகலிங்கம் நீதிபதி வாத்சல்யனை - பாராட்டிப் பேசுவார்கள்.''

கைதட்டல்.

தேஜ் வ்யூஃபைண்டரில் பார்த்தான். சபாரி அணிந்த ஒரு நபர் மைக்கை நோக்கி வந்து கொண்டிருந்தார். வாத்சல்யன் இப்போது யாரையோ பார்த்துக் கும்பிடுவது தெரிந்தது.

சபாரியின் குரல் மைக்கில் கேட்டது.

''இது நீதிபதி வாத்சல்யன் அவர்களுக்கு எடுக்கப்படும் பாராட்டு விழா அல்ல. அந்த நீதி தேவனுக்கே எடுக்கப்படும் விழா. இத்தகைய விழாக்கள் அடிக்கடி எடுக்கப்பட வேண்டும்...

தேஜின் பார்வை வ்யூ ஃபைண்டர் வழியாகப் பாய்ந்து வாத்சல்யனின் மார்பைத் தேடியது.

கிடைத்தது.

"இது ஏதோ சம்பிரதாய பொதுக் கூட்டமோ பாராட்டுக் கூட்டமோ இல்லை. உள்ளார்த்தமாக எடுக்கப்பட்ட விழா. இந்த விழா ஒரு யாகத்திற்கு சமம். இந்தியனாகப் பிறந்த ஒவ்வொருவரும் நீதிபதி வாத்சல்யனைப் பாராட்டக் கடமைப்பட்டவர்கள்."

தேஜ் பிசிறில்லாமல் குறி பார்த்தான்.

வாத்சல்யன் மார்பைக் காட்டினார்.

'இப்போது ட்ரிக்கரை தட்டினால் போதும். தோட்டா தப்பு செய்யாமல் வாத்சல்யனின் மார்பைத் துளைக்கும்."

தேஜின் முக்கியமான மூளைச் செல்கள் பச்சைக் கொடி காட்ட ஆட்காட்டி விரல் ட்ரிக்கரில் பதித்தது. அதை வளைத்தது.

## 4



**பா**லகங்காதரன் கேட்டார்.

"என்ன கதிர்! திகைச்சுப் போயிட்டீங்க...?"

"ஸ... ஸார்... உங்க பொண்ணை... நான் போய்...?"

"ஏன் கூட்டிட்டு வரணும்...? நீங்களே போய் பொண்ணை கூட்டிட்டு வரக்கூடாதான்னு கேட்க வர்றீங்க... இல்லையா...?"

"ஸார்... வந்து...

பாலகங்காதரன் புன்னகைத்தார். “நீங்க கேட்க நினைத்தது சரியான கேள்விதான்... இதுக்கு பதிலைச் சொல்ல வேண்டியதும் என் கடமை. என் பொண்ணு கபிலா மெட்ராஸில் ஒரு பிரைவேட் மெண்டல் ஹாஸ்பிடல்ல அனுமதிக்கப்பட்டிருக்கிற விஷயம் வெளியே யார்க்கும் தெரியாது. அந்த ஹாஸ்பிடல்ல டாக்டராய் இருக்கிற ராம் கோபாலுக்கு மட்டும்தான் இந்த விஷயம் தெரியும். அங்கே வேலை பார்க்கிற ஹாஸ்பிடல் ஸ்டாஃபுக்குக் கூடத் தெரியாது. இவ்வளவு ரகசியமா இந்த விஷயத்தை வெச்சிட்டிருக்கக் காரணம்... கபிலாவுக்கு ஒரு நல்ல மாப்பிள்ளை கிடைக்காமே போயிடக் கூடாதேங்கிறதுதான்... உங்களுக்கு இந்த விஷயம் தெரிஞ்சாலும் அது வெளியே போகாதுங்கிற நம்பிக்கையும் எனக்கு இருக்கு. அதனால்தான் என் பொண்ணை மெட்ராஸிலிருந்து கூட்டிட்டு வர்ற பொறுப்பை உங்ககிட்ட தர்றேன். நான் என் பொண்ணைக் கூட்டிட்டு வர மெட்ராஸ் போகக் கூடிய நிலைமையில் என்னோட ஆரோக்கியம் இல்லை. நூறு கிலோ மீட்டர்க்கு மேல எந்த வாகனத்தில் ட்ராவல் பண்ணினாலும் எனக்கு ஹார்ட் ட்ரபுள் ஆரம்பமாயிடும். ஜர்னியை தவிர்க்கச் சொல்லி டாக்டர் கார்டியாலஜிஸ்ட் குமார் தேவ் எனக்கு ஸ்ட்ரிக்ட்டான உத்தரவே போட்டிருக்கார். எனக்கு இப்படியொரு ஹார்ட் ப்ராப்ளம் இருக்கிறது. வெளியே யார்க்கும் தெரியாது.

“ஸ... ஸார்...

“ஒண்ணும் யோசனை பண்ணாதீங்க கதிர்... நாளைக்கு காலையில் ஆறரை மணிக்கு உங்களுக்கு மெட்ராஸ் ஃப்ளைட்... எட்டு மணிக்குள்ளே நீங்க ஹாஸ்பிடலுக்குப் போயிடலாம். டாக்டர் ராம்கோபாலுக்கு போன் பண்ணி விஷயத்தைச் சொல்லிடறேன்... நாளைக்கு சாயந்தரமே... கபிலாவைக் கூட்டிகிட்டு கோயமுத்தூர் ஃப்ளைட்ல வந்துடலாம்... நான்

இங்கே ஏர்போர்ட்டுக்கு வந்து உங்க ரெண்டு பேரையும் பிக்-அப் பண்ணிக்குவேன்...''

''ஸார்... வந்து...

''ஏதோ கேக்கணும்ன்னு நினைக்கறீங்க... ம்... கேளுங்க.''

''உங்க டாட்டர் கபிலா... இப்ப குணமாயிட்டாங்களா?''

''பூர்ண குணம்... அவ நார்மலுக்கு திரும்பி ஒரு வாரம் ஆச்சு... நேத்து ராத்திரிகூட போன்ல பேசினா... மெட்ராஸி லிருந்து கூட்டிட்டு வரும்போது ஏதாவது ப்ராப்ளம் பண் ணிடுவாளோன்னு பயப்படறீங்க... இல்லையா?''

''ஆ... ஆமா... ஸார்...

''அந்த பயமே உங்களுக்கு வேண்டாம்... கபிலா ஒரு ஹாம்லெஸ் மென்ட்டல் பேஷண்ட். நீங்க நினைக்கிற மாதிரி ப்ரூட்டல் கிடையாது. ஒரு ஃப்ரண்ட் மாதிரி பேசிட்டு வர லாம்... நீங்க சரின்னு சொன்னா ஃப்ளைட் டிக்கெட்டுக்கு ஏற்பாடு பண்றேன்...''

சரி என்கிற மாதிரி தலையசைத்தான் கதிர்.

''தேங்க்யூ... ஏ... லாட்... பாலகங்காதரனின் முகம் பூராவும் புன்னகையொன்று - குத்தகைக்கு எடுத்துக் கொண்டது.

''விஷயம் வெளியே யார்க்கும் தெரியக்கூடாது கதிர்.''

''தெரியாது ஸார்...

''உங்க மனைவிகிட்ட கூட சொல்லக் கூடாது...

''ஸார் என்னை நம்பி ஒரு காரியத்தை ஒப்படைச்சிருக் கீங்க... அதுவும் உங்க குடும்ப சம்பந்தப்பட்ட விஷயம். எந்தக் காரணத்தைக் கொண்டும் யார்கிட்டேயும் இந்த விஷயத்தைச் சொல்ல மாட்டேன்...

"அகெய்ன்... தேங்க்யூ... எம் பொண்ணை நீங்க பார்த்திருக் கீங்களா...?"

"இல்ல... ஸார்...

"இப்ப பார்க்கலாம்... சொன்னவர் தன் மேஜையின் இழுப்பறையைத் திறந்து ஒரு போஸ்ட் கார்ட் சைஸ் போட்டோவை எடுத்து நீட்டினார். கதிர் வாங்கிப் பார்த்தான்.

கையில் பொக்கேயை - வைத்துக் கொண்டு - நீல வண்ண சல்வார் கம்மீஸில் சிரித்தாள் அந்தப் பெண். தெற்றுப் பல் தெரிந்தது.

சுமாரான அழகு.

கண்களில் மட்டும் நிறைய கவிதை.

## 5



கட்-அவுட்டின் - மூங்கில் சாரத்தில் உட்கார்ந்து கொண்டு - தேஜ் துப்பாக்கியின் வ்யூ ஃபைண்டரில் நீதிபதி வாத்சல் யனின் மார்பைத் துல்லியமாய் குறிபார்த்து ட்ரிக்கரை ஆட்காட்டி விரலால் வளைத்தான்.

"எனவே... நீதிபதி வாத்சல்யனின் துணிச்சல் மற்ற மாநிலங்களில் இருக்கும் நீதிபதிகளுக்கும் வரவேண்டும். அரசியல்வாதிகளின் பகடைக் காய்களாக மாறி விடாமல்...

ட்ரிக்கரைத் தட்டினான் தேஜ்.

சைலன்ஸர் பொருத்தப்பட்ட அந்த துப்பாக்கி - சத்தமே இல்லாமல் ஒரு தோட்டாவை அனுப்ப -

வாத்சல்யனின் மார்பு உடனே சிவப்பாகி அவர் நாற்காலியோடு பின்னுக்கு சரிவது தெரிந்தது.

தோட்டா தப்பு செய்யவில்லை.

வாத்சல்யனின் மார்புக்குள் நுழைந்து விட்டது.

தேஜ் துப்பாக்கியின் பாகங்களைப் பத்தே விநாடிகளில் பிரித்து - ப்ரீப்கேஸில் அடைத்துக்கொண்டு - அடுத்த பத்து விநாடிகளுக்குள் சாரத்திலிருந்து சடசடவென்று கீழே இறங்கி - மரங்களின் அடர்த்திக்குப் பின்னே மின்னல் வேக ஓட்டம் ஓடி நிறுத்தி வைத்திருந்த பைக்கின் ஸ்டாண்ட்டை விடுவித்து அதன் மேல் பரவி கிக்கரை உதைத்தான். அதுவும் உடனே அவனுடைய அவசரத்தை உணர்ந்த மாதிரி புகை கக்கி 'பகபக'வென்று கதறியது. தேஜ் ஒரு விநாடி நேரத்தைக் கூட வீணாக்காமல் ஆக்ஸிலேட்டரை முறுக்கினான்.

ரோட்டின் எதிர்பக்க ஹாலில் ஒரு பரபரப்பு அரும்பி பெரிதாகிக் கொண்டிருக்க பைக் உச்சபட்ச வேகத்தில் 'ர்ர்ர்ர்ர்'ரென்று சீறி பறந்தது. அடுத்த சில விநாடிகளில் காணாமல் போயிற்று.

# 6





கதிர் சென்னை வந்து சேர்ந்து ஹோட்டல் 'கோல்ட் சாண்ட்'டில் ரூம் எடுத்ததும் உடனடியாய் டாக்டர் ராம் கோபாலுக்கு டெலிபோன் செய்தான். அவர் கிடைத்தார்.

''குட்மார்னிங் டாக்டர்... நான் கதிர் ஃப்ரம் கோயம் புத்தூர்.''

''குட்மார்னிங்... கதிர்... பாலகங்காதரன் நேத்து ராத்திரியே எனக்கு போன் பண்ணி உங்களைப் பற்றி சொல்லிட்டார். ஃப்ளைட் இன்னிக்கு லேட் போலிருக்கு...''

''ஆமா டாக்டர்... அரை மணி நேரம்...

''ஹோட்டல் கோல்ட் சாண்ட்டிலிருந்துதானே பேசறீங்க?''

''ஆமா... ஜஸ்ட் அரைட்வ்...! பை... த... பை கபிலா எப்படியிருக்காங்க டாக்டர்...?''

''ஃபைன்...

''நான் எத்தனை மணிக்கு ஹாஸ்பிடலுக்கு வரட்டும்...?''

''ஃப்ளைட் சாயந்திரம் எத்தனை மணிக்கு...?''

''அஞ்சரைக்கு...

''அப்படீன்னா... மத்தியானம் மூணு மணி சுமார்க்கு ஒரு டாக்ஸியை அமர்த்திட்டு ஹாஸ்பிடலுக்கு வாங்க... கபிலாவை கூட்டிகிட்டு ஏர்போர்ட் போக சரியா இருக்கும்...

''மூணு மணிக்கு கரெக்டா வந்துடறேன் டாக்டர்...

''ஹாஸ்பிடல் எங்கே இருக்குங்கிற லொகேஷன் தெரியுமா?''

''தெரியும் டாக்டர்...

''மிஸ்டர் கதிர்! நீங்க கபிலாவை கூட்டிட்டுப் போகிற விஷயம் ரொம்ப ரகசியமா இருக்கணும். பாலகங்காதரன் உங்ககிட்டே எல்லாத்தையும் சொல்லியிருக்கார்ன்னு நினைக் கிறேன்...

''சொல்லியிருக்கார் டாக்டர்... அந்த விஷயத்தில் நான் ரொம்பவும் காஷியஸ்... எம்.டி. என் மேல வெச்சிருக்கிற

நம்பிக்கைக்கு பாத்திரமா நடந்துக்குவேன்... கபிலா கிட்டே நான் இப்ப பேசலாமா டாக்டர்?''

''கபிலா இப்பத்தான் ப்ரேக் பாஸ்ட்டை முடிச்சுகிட்டு ரெக்ரியேஷன் செல்லுக்கு போனா... கேரம் போர்டு, செஸ் விளையாட உட்கார்ந்துட்டான்னா எல்லாத்தையும் மறந்துடுவா... நீங்கதான் மத்தியானம் மூணு மணிக்கு வர்றீங்களே... அப்ப பேசிக்கலாம்...

''ஓ... கே... டாக்டர்...

கதிர் ரிஸீவரை வைத்துவிட்டு படுக்கையில் சாய்ந்த விநாடி -

அறையின் அழைப்பு மணி 'கிணிங்' என்று கூப்பிட்டது.

எழுந்து போய் கதவைத் திறந்தான்.

வெளியே

அந்தப் பெண் நின்றிருந்தாள்.

இளம் பெண். கண்களில் நிறைய மை. இளஞ்சிவப்பு நிற கம்ப்யூட்டர் சேலையை தொப்புள் தெரியும்படி கட்டியிருந்தாள். உறுத்திய லிப்ஸ்டிக் பூச்சு. காற்றுக்கு விலகிய முந்தானை.

கதிர் கேட்டான்.

''யார் வேணும்...?''

''இங்கே... சந்தோஷ்ன்னு...

''சந்தோஷா...? அப்படி யாருமில்லையே... உங்களுக்கு எந்த ரூம் நெம்பர் வேணும்...?''

''ட்டு நாட் த்ரீ...

''இது ட்டு நாட் த்ரீதான்... ஆனா நீங்க கேட்கிற நபர் இங்கே இல்லை... ஹோட்டல் கௌண்டர்ல விசாரிச்சுப் பாருங்க...

"ஸாரி... ஃபார்... த... ட்ரபுள்...

அந்தப் பெண் திரும்பி நடந்தாள்.

# 7



சரியான கோணத்தில் பாய்ந்த தோட்டா இருதயத்தை சிதைத்து ரத்தக் கூழாக்கியிருக்க - வாத்சல்யன் அந்த விநாடியே இறந்து போயிருந்தார். மேடையில் நாற்காலிகள் உருண்டு கவிழ்ந்திருந்தன. சற்று முன் வாத்சல்யனைப் பாராட்டி பேசியவர்கள் இப்போது போலீஸின் பாதுகாப்பு வளையத்துக்குள் இருந்தார்கள். ப்ரஸ் ரிப்போர்ட்டர்கள், வீடியோ கிராபர்கள் ஒரு பக்கம் ஒதுங்கித் தெரிந்தார்கள்.

விவேக் போலீஸ் அதிகாரி ஒருவரிடம் கேட்டுக் கொண்டிருந்தான்.

"தோட்டா எந்த திசையிலிருந்து பாய்ந்ததுன்னு கணிக்க முடியலையா...?"

"முடியலை ஸார்... சைலன்சர் தோட்டா அது. ஒரு சின்ன சத்தம் கூடக் கேட்கலை... ஜஸ்டிஸ் வாத்சல்யன் திடீர்னு மார்பைப் பிடிச்சுகிட்டு சாய்ஞ்சார். சாயும்போதே மார்பில் ரத்தம் தெரிஞ்சது... ஒரு ரெண்டு நிமிஷத்துக்கு எதுவும் பிடிபடலை ஸார்... ஜஸ்டிஸைப் பாராட்டிப் பேச வந்த டாக்டர் சேஷ கோபாலன் சோதிச்சுப் பார்த்து தோட்டா பாய்ஞ்சிருக்குன்னு சொன்னதும்தான்... துப்பாக்கியால யாரோ சுட்டிருக்காங்கன்னு பிடிபட்டது. கூட்டத்துக்கு வந்தவங்கள்ல

யாராவது ஜஸ்டீஸை ஷூட் பண்ணியிருக்கலாம்ன்னு நினைச்சு இந்தக் கட்டிடத்தோட வெளிக் கதவை சாத்தினோம்...''

''ரெண்டு மூணு நிமிஷம் கழிச்சுத்தான் வெளிக் கதவை சாத்தியிருக்கீங்க...?''

''ஆமா... ஸார்...

''கொலையாளி அதுக்குள்ளே தப்பிச்சு வெளியே போயிருக் கலாமே...?''

போலீஸ் அதிகாரி எதுவும் பேசவில்லை. சில விநாடி மௌனத்திற்குப் பின் - விவேக் கேட்டான்.

''சரி... இந்தக் கட்டிடத்துக்குள்ளே... இருந்தவங்களை சோதனை போட்டீங்களா...?''

''போட்டோம்... ஸார்... யார்கிட்டேயிருந்தும் எதுவும் கிடைக்கலை... தே ஆர் ஹார்ம்லெஸ்...

விவேக் கையில் வைத்திருந்த சிறிய வயர்லஸ் கருவியை உசுப்ப அது சிவப்புக் கண்களை விழித்துப் பார்த்தது. கரகரத்தது.

''இது போலீஸ் ஹெட்க்வார்ட்டர்ஸ் கண்ட்ரோல் ரூம்...

''நான் விவேக்... ஜஸ்டீஸ் டெட் ஸ்பாட்டிலிருந்து பேசிட்டிருக்கேன்... கொலையாளி ஸ்தலத்தில் இல்லை என்பது உறுதியாகி விட்டது. போலீஸ் பவுண்டரி செக் போஸ்ட்கள் உடனடியாய் முளைக்க வேண்டியது அவசியம். ஏர்போர்ட், ரயில்வே ஸ்டேஷன், பஸ் ஸ்டேண்ட் விஜிலன்ஸ் கண்காணிப்பில் இருக்கட்டும். சந்தேகம் தட்டுகிற ஆசாமிகளை உடனடியாய் பக்கத்து போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்களுக்கு கொண்டு போய் அடைக்கும்படி செய்தி அனுப்புங்கள்...''

''எஸ்... ஸார்...

விவேக் வயர்லஸ்ஸை அணைத்தான். பக்கத்திலேயே நின்றிருந்த போலீஸ் அதிகாரி கேட்டார்.

''ஸார்...! பாடியை போஸ்ட் மார்ட்டத்துக்கு அனுப்பிட லாமா...?''

''ஃபாரன்ஸிக் பார்த்துட்டாங்களா...?''

''பார்த்துட்டாங்க ஸார்...

''எனி ரிப்போர்ட் ரிக்கார்டிங் வித் சீன் ஆஃப் க்ரைம்.''

''நாட் கிவன் ஸார்...

''சரி... பாடியை போஸ்ட் மார்ட்டத்துக்கு அனுப்பி உட னடியா ரிப்போர்ட் வாங்குங்க... சொன்ன விவேக் ஒரு முறை திரும்பி மேடையில் சரிந்து கிடந்த வாத்சல்யனின் உடலைப் பார்த்தான்.

மார்பில் உறைந்து போயிருந்த ரத்தம் இப்போது ஃபாரன்ஸிக் ஆட்களால் துடைக்கப்பட்டிருக்க தோட்டா உண்டாக்கிய காயக்குழி இப்போது ஸ்பஷ்டமாய் தெரிந்தது.

காயத்தின் வாயைப் பார்வையால் வாங்கிய விவேக்கின் கண்கள் வேகமாய் சுருங்கின.

மெல்ல நடந்து பக்கத்தில் போனான்.

காயத்தின் வாய் இப்போது ஆழமாய் ரத்தமின்றி தெரிய

உ...ள்..ளே.

தோட்டாவின் உலோக உடம்பு சதைக்குள் புதைந்து போய் கொஞ்சமாய் தன் இருப்பிடத்தைக் காட்டியது.

விவேக் அந்தக் காயத்தையே சில விநாடிகள் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு சற்று தள்ளி நின்றிருந்த ஃபாரன்ஸிக் ஆபீஸரைக் கூப்பிட்டான்.

''மிஸ்டர்... ஷ்யாம்...

காதோரம் நரைத்திருந்த அந்த ஷ்யாம் வேக வேகமாய் பக்கத்தில் வந்தார்.

''ஸார்...

''உள்ளே தோட்டாவோட உலோக உடம்பு தெரியுது... பார்த்தீங்களா...?''

''பார்த்தேன் ஸார்...

''எனி கமெண்ட்...?''

''நாட் நவ் ஸார்... பாடி போஸ்ட்மார்ட்டம் போய் தோட்டா லேப்புக்கு வந்த பின்னாடிதான்... தோட்டா எந்த ஜாதின்னு சொல்ல முடியும்...

விவேக் திரும்பி எட்ட நின்றிருந்த இரண்டு கான்ஸ்டபிள் களை கையசைத்துக் கூப்பிட்டான். அவர்கள் வந்தார்கள்.

''ஜஸ்டீஸ் எந்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தாரோ... அந்த நாற்காலியில் அவர் எப்படி உட்கார்ந்திருந்தாரோ... அதே போஸில் உட்கார வையுங்க...

கான்ஸ்டபிள்கள் ஜஸ்டீஸ் வாத்சல்யனின் உடலைத் தூக்கி - அவர் முன்பு அமர்ந்திருந்த நாற்காலியில் உட்கார வைத் தார்கள்.

# 8



மகாபலிபுரம் போகும் ரோட்டில் இடது பக்கமாய் பிரிந்த மண் பாதையில் தன் பைக்கை நுழைத்தான் தேஜ்.

உடம்பு பூராவும் மகிழ்ச்சி முரசு. ரத்தம் 'சந்தோஷம் சந்தோஷம்' என்று கத்திக் கொண்டு பாய்ந்தது.

துல்லியமான குறி.

தோட்டா துரோகம் செய்யவில்லை.

மண்பாதை முடிந்து போயிருக்க அந்த அடர்த்தியான முந்திரி தோப்பு வந்தது. தோப்புக்கு நடுவில் யார்க்கோ பயந்து கொண்டு ஒளிந்திருக்கிற மாதிரி அந்த பங்களா சம் மணம் போட்டு உட்கார்ந்திருந்தது.

தேஜ் பைக்கை நிறுத்தி ஸ்டாண்டிட்டு விட்டு தோப்புக்குள் நுழைந்து - கொட்டியிருந்த நிழலில் நடந்தான். அந்த முற்பகல் நேரத்திலேயே யாரோ மிரட்டி வைத்த மாதிரி அமைதி.

தேஜ் சருகுகளை மிதித்துக் கொண்டு நடக்க - பங்களாவின் முகப்பு வந்தது. பழைய மோஸ்தர் பங்களா.

ஒரு ஆள் எதிர்பட்டான்.

தேஜ் புன்னகைத்துக் கேட்டான்.

''ஸாம்... ஸார்... உள்ளே இருக்காரா...?''

''ம்... இருக்கார்... உன்னை எதிர்பார்த்துதான் காத்திட்டிருக் கார்...

தேஜ் உள்ளே போனான்.

அரையிருட்டாய் ஹால் வந்தது. சோபாவில் அந்த உருவம் சாய்ந்து தெரிந்தது. கையில் ஸ்காட்ச் அசையும் டம்ளர்.

''வா... தேஜ்...

''காரியத்தை முடிச்சுட்டேன்...

''தெரியும்... எனக்கு நியூஸ் வந்தாச்சு...

''ஒரே தோட்டா...

''தெரியும்... தெரியும்... யார் கண்ணிலாவது பட்டாயா?''

''படுவேனா...?''

''உட்கார்...

''எனக்கு உட்கார நேரமில்லை. பேசினபடி பணம் வந்துட்டா நான் போய்கிட்டே இருப்பேன்...

''ஸ்காட்ச் சாப்பிடறியா?''

''வேண்டாம்...

''அட்வான்ஸ் எவ்வளவு வாங்கியிருக்கே?''

''ஐம்பதாயிரம்...

''பாக்கி ஐம்பதாயிரம் தரணும் இல்லையா?''

''ஆமா...

ஸ்காட்ச் விஸ்கி திரும்பிப் பார்த்து குரல் கொடுத்தது.

''ஸாம்...

அந்த ஸாம் உடனே எட்டிப் பார்த்தான். ''ஸார்...

''தேஜ்க்கு பணத்தைக் குடுத்துடு...

ஸாம் தலை மறைய ஸ்காட்ச் விஸ்கி தேஜை ஏறிட்டது.

''பணத்தை வாங்கிட்டு எங்கே போறே தேஜ்...?''

''அது உங்களுக்கு வேண்டாத விஷயம்...

''அட... ஏன் இப்படிக் கோபப்படறே..! ஒரு ஆத்திர அவசரத் துக்கு வேணுமின்னா நீ எங்கே இருக்கேன்னு தெரிய வேண் டாமா...?''

''பத்து நாள் கழிச்சு நானே வர்றேன்...

பின்னால் சத்தம் கேட்டது.

தேஜ் திரும்பிப் பார்த்தான்.

ஸாம் ஒரு ப்ரீப் கேஸோடு வந்து கொண்டிருந்தான்.

''பணத்தை நிதானமா... யார்க்கும் சந்தேகம் ஏற்படாத வகையில் செலவு பண்ணு தேஜ். பணம் இருக்கேன்னு தாம் தூம்ன்னு செலவு பண்ணாதே... அது யாருடைய கண்களை யாவது உறுத்த ஆரம்பிச்சா... விஷயம் போலீஸுக்கு போயிடும்...''

''அதையெல்லாம் நான் பார்த்துக்கிறேன். மொதல்ல எனக்கு பணத்தைக் குடுத்து செட்டில் பண்ணுங்க...

ஸ்காட்ச் விஸ்கி ஸாமை பார்த்து தலையசைத்தான். ''தேஜ்க்கு குடுக்க வேண்டியதைக் குடுத்துடு...

ஸாம் டீபாயின் மேல் ப்ரீப் கேஸை வைத்து அதன் பட்டன்களை அழுத்தித் திறந்தான்...

''ப்ளக்...

கண்ணிமைக்கிற நேரம்தான்.

ஸாமின் கையில் சட்டென்று ஒரு ரிவால்வர் முளைத்து தேஜை நோக்கி உயர்ந்தது.

தேஜ் அந்த ஆபத்தைப் பார்த்து சுதாரிப்பதற்குள் -

'ஷ்ஷ்ஷ்க்க்க.

தோட்டா ஒன்று அடிவயிற்றில் பாய்ந்து - ஒரு கிட்னியை நொறுக்க பொத்தலாகிவிட்ட ரத்த வயிற்றை பற்றிக் கொண்டு தேஜ் சரிந்தான். ஸ்காட்ச் விஸ்கி கோணல் சிரிப் போடு எழுந்தது.

''நான் கிளம்பறேன். தேஜ் கணக்கை செட்டில் பண்ணிரு ஸாம்...

ஸாம் தலையாட்டியபடி - சரிந்து கிடந்த தேஜ்க்கு பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

தேஜின் வாய் தாகத்துக்கு தண்ணீர் வேண்டி திறக்க வாய்க்குள் பிஸ்டலை நுழைத்தான் ஸாம்.

ட்ரிக்கரைத் தட்டினான்.

வயிற்றுக்குள் பாய்ந்த தோட்டா ஒரு ரத்தப் பிரளயத்தை நடத்த தேஜின் உடல் சில விநாடிகளுக்கு துரிதமாய் துடித்து அடங்கியது.

ஸாம் தேஜின் வலது காலைப் பற்றி உடம்பைத் தரதர வென்று இழுத்துக் கொண்டு பங்களாவின் பின் பக்கம் போய் வெட்ட வெளியில் கிடத்தி பக்கத்து ஸ்டோர் ரூமுக்குப் போய் ஐந்து லிட்டர் பெட்ரோல் கேனை கொண்டு வந்து தேஜின் உடம்பை பெட்ரோலால் தெப்ப தெப்பலாய் நனைத்தான். நான்கைந்து தென்னை மட்டைகளைக் கொண்டு வந்து உடம்பை மூடியபின் ஒரு தீக்குச்சியைக் கிழித்து நெருப்பு ஜுவாலையை உண்டாக்கி - சுண்டி எரிந்தான்.

தேஜின் உடம்பு ஒரு விறகாய் மாறி எரிய ஆரம்பித்தது.



# 9



**க**திர் குளித்து உடைமாற்றிக் கொண்டு காலைச் சிற்றுண்டிக்கு ஆர்டர் செய்வதற்காக அழைப்பு மணிக்கான பொத்தானைத் தட்டினான்.

ரூம் சர்வீஸ் பாய் வந்து நின்றான். பதினெட்டு வயது இருக்கலாம். மேலுதட்டில் கணிசமான ரோம வளர்ச்சி. ப்ரௌன் நிற சட்டை பேண்ட்.

''என்ன ஸார் வேணும்...?''

''டிஃபன் என்ன இருக்கு...?''

சின்னதாய் ஒரு பட்டியலைச் சொன்னான் அவன். கதிர் சில விநாடிகள் யோசித்துவிட்டு ''ரெண்டு இட்லி, ஒரு செட் பூரி, காபி'' என்றான்.

''போதுமா ஸார்...?''

''போதும்...

மெல்ல திரும்பி நடந்த ரூம் சர்வீஸ் பையன் நின்று தயக்கமாய் கேட்டான்.

''வேற ஏதாவது வேணுமா... ஸார்?''

''வேண்டாம்...

''லிக்கர் அயிட்டம் ஏதாவது...?''

''வேண்டாம்...

''நல்ல ஃபாரின் சரக்கு இருக்கு ஸார்... ராயல் சல்யூட் ப்ளாக் அண்ட் ஒயிட்...''

''வேண்டாம் தம்பி... எனக்கு அதெல்லாம் பழக்கமில்லை...

பையன் நகராமல் மெல்ல புன்னகைத்தான்.

''லிக்கர் பிடிக்கலைன்னா வேண்டாம் ஸார்... ஆனா...

''ஆனா... என்ன...?''

''நல்ல கேர்ள்ஸ் இருக்காங்க...

கதிர் அதிர்ச்சியாய் நிமிர்ந்தான். பையன் பற்களைக் காட்டினான். "நல்ல ஃபேமிலி கேர்ள்ஸே கிடைப்பாங்க ஸார். பதினெட்டு வயசிலிருந்து இருபத்தஞ்சு வயசுக்குள்ளே.

கதிர் எழுந்து அவன் பக்கத்தில் போனான்.

"என்னடா... சொன்னே...?"

கதிரின் கண்களில் தெரிந்த கோபத்தைப் பார்த்து பயந்து பையன் பின் வாங்குவதற்குள் கதிரின் கை பளீரென்று பையன் கன்னத்தில் இறங்கியது.

"ஸ... ஸார்...

"ராஸ்கல்! போய் டிபனை மாத்திரம் கொண்டா. மத்த வங்கிட்டே பேசற மாதிரி என்கிட்டே பேசினே. மூஞ்சி முகரையைப் பேர்த்துடுவேன். இந்த வயசுல... பிம்ப் வேலையா பார்க்கிறே...?"

பையன் கன்னத்தை தேய்த்துக் கொண்டே கதிரை வெறித்துப் பார்த்தபடி - பின் வாங்கி அறையை விட்டு வெளியேறினான்.

# 10



ஜஸ்டிஸ் வாத்சல்யனின் உடல் நாற்காலியில் உட்கார்த்தி வைக்கப்பட்டு தலை நிமிர்த்தப்பட்டது.

விவேக் ஃபாரன்ஸிக் ஆபீஸரை ஏறிட்டான்.

''மிஸ்டர் ஷ்யாம்...! தோட்டா ஏற்படுத்தின காயத்தையும் அந்தக் காயத்தோட மார்க்கத்தையும் கொஞ்சம் கவனிங்க...''

ஷ்யாம் கவனித்துவிட்டு நிமிர்ந்தார்:

''தோட்டா நேரா பாயாமே... சரிவா பாய்ஞ்சிருக்கு ஸார்...

''அந்த சரிவு கோணத்தை மெஷர் பண்ணுங்க பார்க்கலாம்.''

ஷ்யாம் கண்ணாடியாலான டிகிரி மெஷரரை வரவழைத்து தோட்டா பாய்ந்த இடத்தை ஒரு சின்ன ஆய்வு செய்து விட்டு நெற்றியில் கோர்த்துக் கொண்ட வியர்வையோடு விவேக்கை ஏறிட்டார்.

''எழுபது டிகிரி கோணத்தில் தோட்டா பாய்ஞ்சிருக்கு ஸார்.''

''நீங்க சொல்றதைப் பார்த்தா தோட்டாவோட 'ட்ராஜெக்டரி' ஒரு உயரமான இடத்திலிருந்து வந்திருக்கலாம் இல்லையா...?''

''மே... பி... ஸார்...

''உயரமான இடத்திலிருந்து சுட்டாத்தான் தோட்டா இப்படி எழுபது டிகிரி கோணத்தில் உடம்புக்குள்ளே பாய முடியும்... இங்கே உயரமான இடம் எது...?''

விவேக் சொல்லிக் கொண்டே பார்வையை உயர்த்த கட்டிடத்துக்கு வெளியே

கும்பிட்ட போஸில் அந்த அரசியல் தலைவரின் கட் அவுட் தட்டுப்பட்டது.

# 11



டெலிபோன் அடித்தது.

சிகரெட்டை புகைத்துக் கொண்டிருந்த ஸாம் எழுந்து போய் ரிஸீவரை எடுத்தான்.

"ஹலோ...

"என்ன எரிச்சாச்சா...?" மறுமுனையில் குரலைக் கேட்டதும் கையிலிருந்த சிகரெட்டை கீழே போட்டு பூட்ஸ் காலால் நசுக்கினான் ஸாம். குரலில் மரியாதை ஒட்டிக் கொண்டது.

"ஆச்சு ஸார்... ரெண்டு டின் சாம்பல்...

"கிணத்துக்குள்ளே கொட்டிடு...! வெச்சிட்டிருக்காதே."

"சரி... ஸார்...

"பைக்கை என்ன பண்ணினே...?"

"பார்ட் பார்ட்டா பிரிச்சு ஸ்டோர் ரூம்ல போட்டிருக்கேன்...

"சாயந்தரம் ஆறு மணிக்கு மேல என்னை வந்து பார்த்துட்டு போ...

"சரி ஸார்...

"எவ்வளவு முக்கியமான விஷயமா இருந்தாலும் சரி... எனக்கு போன் பண்ணி பேசற வேலை மட்டும் வேண்டாம்...

''நீங்க ஏற்கெனவே சொல்லியிருக்கீங்க ஸார்... அதை மறப்பேனா...?''



## 12



கட் அவுட்டை அண்ணாந்து பார்த்தான் விவேக். கட் அவுட்டின் பின்பக்கம் மரங்கள் அடர்த்தியாய் இருப்பது இருதயத்தை லேசாய் பிராண்டியது.

ஜனநடமாட்டம் அற்ற பகுதி.

விவேக் தான் அணிந்திருந்த ஷூக்களை கழற்றி ஓரமாய் வைத்துவிட்டு கட் அவுட் சாரத்தின் மேல் கால் வைத்து ஏறினான்.

சாரத்தில் - மெல்ல மெல்ல உயர்ந்து - கட் அவுட் தலைவரின் இடுப்புப் பகுதிக்கு வந்ததும் ஒரு பொத்தல் வழியாக ரோட்டின் எதிர்புறம் இருந்த கட்டிடத்தின் மேடையும் நாற்காலியில் உட்கார்த்தி வைக்கப்பட்டிருந்த வாத்சல்யனின் உடலும் தெரிந்தது.

கட் அவுட்டின் விலா பகுதிக்கு வந்ததும் மேடை முழு வதும் இன்னும் நன்றாய் தெரிந்தது.

'இந்த பொத்தல் வழியாகத்தான் ஜஸ்டீஸ் வாத்சல்யனை குறி பார்த்து சுட்டிருக்க வேண்டும்...!''

விவேக் தீர்மானத்துக்கு வந்து சாரத்திலிருந்து இறங்கி கீழே வந்தபோது - அந்த வீடியோ கிராபர் எதிர்பட்டான்.

''ஸார்...! உங்க கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்...

''என்ன...?''

''நான் விழாமேடை நிகழ்ச்சிகளை வீடியோவில படம் எடுத்துட்டிருக்கும்போது - எதேச்சையா ஒரு தடவை இந்த கட் அவுட்டையும் பார்த்தேன். அப்போ... கட் அவுட் பொத்தல் வழியா ஒரு முகம் தெரிந்தது. ஒரு இண்ட்ரஸ்ட் டுக்காக காமிரா கோணத்தை கட் அவுட் பக்கம் திருப்பி அந்த முகத்தைப் படம் பிடிச்சேன்...

விவேக் நிமிர்ந்தான்.

''அந்த முகத்தை வீடியோவில் படம் பிடிச்சீங்ளா?''

''ஆமா... ஸார்...

''யார்... அது...?''

''தெரியல்ல ஸார்... கட் அவுட்டை பிரிக்கிறதுக்காக யாராவது அதுமேல ஏறியிருக்கலாம்ன்னு நினைச்சேன்.. இப்ப நீங்க கட் அவுட் மேல ஏறி பார்த்திட்டிருக்கும்போது தான்... எனக்கு அந்த முகத்தோடு ஞாபகம் வந்தது...

''உங்க பேர் என்ன...?''

''ரவிப்ரகாஷ் ஸார்...

''எந்த பத்திரிகையிலிருந்து வர்றீங்க...?''

''இந்தியா டுமாரோ...

''இந்த கட் அவுட்டையும் கட் அவுட் பொந்தில் தெரிஞ்ச முகத்தையும் வீடியோ காமிராவில் ஷூட் பண்ணியிருக்கீங் களா...?''

''பண்ணியிருக்கேன் சார்... ஆனா சில விநாடிகள் தான்...

"அது போதும்...! இப்போதைக்கு இந்த விஷயம் வெளியே தெரிய வேண்டாம் ரவிப்ரகாஷ். இந்த ஸ்பாட்டை விட்டு கிளம்பும்போது நீங்களும் என் கூட வந்துடுங்க... நீங்க எடுத்த காஸெட்டை போலீஸ் ஹெட்க்வாட்டர்ஸுக்கு கொண்டு போய் டெக்ல போட்டுப் பார்த்துடலாம்...

தலையாட்டினான் ரவிப்ரகாஷ்.

# 13



கதிர் காலை பதினோரு மணி வரைக்கும் ஸ்டார் டி.வி.யில் ரெஸ்லிங் மேனியா பார்த்தான். அது அலுத்துப் போகவே காப்பி வரவழைத்து சாப்பிட்டு விட்டு டீபாயில் கிடந்த ஆங்கில நாளிதழை எடுத்துப் புரட்டிக் கொண்டே படுக்கையில் சாய்ந்தவனை டெலிபோன் கூப்பிட்டது.

ரிஸீவரை எடுத்தான்.

"ஹலோ...

ஹோட்டல் டெலிபோன் ஆபரேட்டரின் குரல் கேட்டது.

"மிஸ்டர் கதிர்...

"எஸ்...

"கால் ஃப்ரம் கோயமுத்தூர்."

"குடுங்க...

சில விநாடிகளில் லைன் கிடைத்தது.

பாலகங்காதரன் குரல் கேட்டது.

''கதிர்...?''

''வணக்கம்...! நான்தான்... ஸார்...

''டாக்டர் ராம்கோபாலை காண்டாக்ட் பண்ணீங்களா...?''

''வந்ததும் பண்ணிட்டேன் ஸார்...

''என்ன சொன்னார்...?''

''ஹாஸ்பிடலுக்கு மூணு மணிக்கு வரச் சொல்லியிருக்கார்...

''போன்ல கபிலாவோடு பேசினீங்களா...?''

''இல்ல ஸார்...

''ஏன்...?''

''கபிலா ஹாஸ்பிடல் ரெக்ரியேஷன் ரூம்ல இருக்கிறதாய் டாக்டர் சொன்னார். டிஸ்டர்ப் பண்ண வேண்டாமேன்னு பேசலை...

''சரி ஹாஸ்பிடலுக்கு மூணு மணிக்கெல்லாம் போயிடுங்க கதிர்... எந்த காரணத்துக்காகவும் லேட் பண்ணிடாதீங்க...

''எனக்கு தெரியாதா ஸார்...?''

''ஏழு மணிக்கு ஏர்போர்ட்ல பார்ப்போம்... எனக்கு ஏதாவது போன் பண்ணி சொல்லணும்ன்னா... என்னோட பிரைவஸி டெலிபோன் நெம்பர்க்கு போன் பண்ணுங்க...

''சரி... ஸார்...

# 14




**போ**லீஸ் ஹெட்க்வார்ட்டர்ஸ் செங்காவிக் கட்டிடம்.

உள்ளுக்குள் இருந்த ஆடியோ விஷுவல் அறையில் உயர்தர போலீஸ் அதிகாரிகளோடு விவேக் உட்கார்ந்திருக்க வீடியோகிராபர் ரவிப்ரகாஷ் கொடுத்த கா்ஸெட் டெக்கில் திணிக்கப்பட்டு - டி.வி. திரையில் ஓடிக் கொண்டிருந்தது.

விழா மேடையில் பிரமுகர்களின் முகங்கள். ஒரு நாயக மாய் சிரித்தபடி ஜஸ்டீஸ் வாத்சல்யன்.

வீடியோ காமிராவின் கோணம் விநாடிக்கு விநாடி மாறிக் கொண்டிருந்தது. மைக்கில் ஒருவர் பேசிக் கொண்டிருக்க கூட்டம் அடிக்கடி கைகளைத் தட்டியது.

ஆடியோ மெலிதாய் கேட்டது.

"இது ஏதோ சம்பிரதாயப் பொதுக்கூட்டமோ பாராட்டுக் கூட்டமோ இல்லை. உள்ளார்த்தமாய் எடுக்கப்பட்ட விழா. இந்த விழா ஒரு யாகத்திற்கு சமம். இந்தியனாகப் பிறந்த ஒவ்வொருவரும் நீதிபதி வாத்சல்யனைப் பாராட்டக் கடமைப் பட்டவர்கள்...

பிரமுகர் பேசிக் கொண்டிருக்கும்போதே வீடியோ காமிரா கோணம் மாறியது. காமிராமேன் ரவிப்ரகாஷ் குரல் கொடுத்தான்.

"இந்த இடத்தில்தான்.. அந்த கட் அவுட்டையே ஏதேச்சையா பார்த்தேன் ஸார்..."

விவேக் உன்னிப்பானான்.

டி.வி. திரையில் இப்போது கட் அவுட் தெரிந்தது. சற்றே தூரக்காட்சி. ஜூம் லென்ஸ். இப்போது செயல்பட கட் அவுட் திரையில் பெரிதாகியது.

பெரிதாகிக் கொண்டிருக்கும் போதே கட் அவுட்டின் விலாப் பகுதியில் தெரிந்த பொத்தலில் ஒரு முகம் அசைந்தது.

லென்ஸில் பொத்தல் பெரிதாகி டி.வி. திரை பூராவும் வியாபிக்க அந்த முகம் பளிச்சென்று தெரிந்தது.

மூன்றே மூன்று விநாடிகள்தான்.

முகம் மறைந்து விட்டது.

காமிரா கோணம் மறுபடியும் - மாறி விழா மேடைக்கு வர நீதிபதி வாத்சல்யன் சிரித்தார்.

காமிராமேன் ரவிப்ரகாஷ் விவேக் பக்கத்தில் குனிந்து சொன்னான்.

''அந்த ஒரு ஷாட் மட்டும்தான் ஸார்... அதுக்கப்புறம் காமிராவை கட்-அவுட் பக்கம் திருப்பலை...

விவேக் கையில் வைத்திருந்த ரிமோட் கண்ட்ரோலை உபயோகப்படுத்தி காஸட்டை ரீ வைண்ட் செய்து மறுபடியும் அந்த கட்அவுட் காட்சியை திரைக்கு கொண்டு வந்தான்.

கட் - அவுட் விலாப் பகுதியின் பொத்தலில் -

அந்த முகம்.

க்ளோஸப்பில் மூன்றே மூன்று விநாடி மட்டும் தெரிந்து மறைந்த அந்த முகம்.

'யார் இவன்...?''

விவேக் மீண்டும் ரீ-வைண்ட் செய்து அந்த முகத்தை திரைக்குக் கொண்டு வந்து 'ப்ரீஸ்' செய்தான்.

முகம் இப்போது திரையில் அச்சடித்த மாதிரி நின்றது.

விவேக் தனக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த போலீஸ் அதிகாரிகளிடம் திரும்பினான்.

"இவன் யார்ன்னு உங்கள்ல யார்க்காவது தெரியுதா...?"

அதிகாரிகள் உற்றுப் பார்த்தார்கள்.

முகம் பிடிபடவில்லை.

## 15



கதிர் மூன்று மணிக்கெல்லாம் ஹோட்டல் அறையை காலி செய்து கொண்டு - ஒரு டாக்ஸி பிடித்து - நகர்க்கு ஒதுக்குப்புறமாய் இருந்த அந்த மென்ட்டல் க்யூர் ஹாஸ்பிடலுக்குப் போய் சேர்ந்தபோது ஹாஸ்பிடல் வேப்ப மரங்களுக்கு மத்தியில் நிசப்தமாய் இருந்தது.

சற்றே பழைய காலத்து கட்டிடம். ஜன்னல்களில் பெயிண்ட் பூச்சு புதிதாய் தெரிந்தது.

டாக்ஸியை காம்பௌண்ட் கேட்டுக்கு வெளியே நிறுத்தி விட்டு உள்ளே நுழைந்தான் கதிர்.

ஆயா மாதிரி ஒரு பெண் எதிர்பட்டாள்.

"டாக்டர் ராம்கோபால் இருக்காரா?"

''இருக்கார்... நீங்க...?''

''என் பேர் கதிர்...

''உங்களை டாக்டர் வரச் சொல்லியிருந்தாரா?''

''ஆமா..

வராந்தாவின் வளைவில் இருந்த அறையைக் காட்டினாள்.

''போய்ப் பாருங்க... அவள் நகர்ந்து விட, கதிர் அந்த அறையை நோக்கிப் போனான்.

அது ஹாஸ்பிடல் மாதிரியே தெரியவில்லை. ஏதோ ஒரு ஹாஸ்டலுக்குள் நுழைந்த உணர்வு. ஆங்காங்கே சுவர்களில் பொன் மொழிகள்.

**நிதானம் உன்னைப் பதமாக்கும். இதமாக்கும்.**

**நேசிக்கக் கற்றுக் கொள். நேசிக்கப்படுவாய்.**

அறை வந்தது.

கதவு லேசாய் திறந்திருந்தாலும் தட்டினான்.

''டொக்.. டொக்...

''கம் இன்...

உள்ளேயிருந்து குரல் கேட்டதும் கதிர் கதவைத் திறந்து கொண்டு நுழைந்தான்.

டாக்டர் ராம்கோபால் ஒரு புத்தகம் படித்தபடி தெரிந்தார். வட இந்திய சிவப்பு முகம். சற்றே எலும்பு தட்டிய முகம். ஒடிசலான தேகம். வெயிஸ்ட் கோட்டும் பைஜாமாவும் அவரை வித்தியாசப்படுத்தி காட்டியது.

''வணக்கம் டாக்டர்... நான் கதிர்...

ராம்கோபால் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை கண்ணாடி மேஜையின் மேல் கவிழ்த்து வைத்தார்.

''வாங்க... கரெக்டா... சொன்ன நேரத்துக்கு வந்துட்டீங்களே...?''

''நான் மெட்ராஸுக்கு வந்ததே கபிலாவை கூட்டிட்டுப் போறதுக்குத்தான்... வேற எந்த என்கேஜ்மெண்ட்டும் கிடையாது...

''டாக்ஸியில்தானே வந்தீங்க...?''

''ஆமா...

''உட்கார்ந்துட்டிருங்க... நான் போய்... கபிலாவைக் கூட்டிட்டு வந்துடறேன்...

டாக்டர் எழுந்து போக கதிர் நாற்காலிக்கு நன்றாக சாய்ந்து உட்கார்ந்து அந்த அறையைப் பார்வையால் கழுவினான். அறை ஆன்மீக நெடி அடித்தது. சுவரில் ராம கிருஷ்ண பரமஹம்ஸர், சாரதாமணி தேவி, விவேகானந்தர் சந்தனமாலைகளில் தெரிந்தார்கள். வலது பக்க சுவரில் பகவத் கீதை வாசகங்கள் கண்ணாடி பிரேமிட்டு பளிச்சென்று பார்வைக்கு கிடைத்தது. அந்த வாசகங்களைப் படித்தான் கதிர்.

**'எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது. எது நடக்கிறதோ அது நன்றாகவே நடக்கிறது. எது நடக்க இருக்கிறதோ அதுவும் நன்றாகவே நடக்கும். உன்னுடையதை எதை இழந்தாய்...? எதற்காக நீ அழுகிறாய்...? எதை நீ கொண்டு வந்தாய் அதை நீ இழப்பதற்கு...? எதை நீ படைத்திருந்தாய் அது வீணாவதற்கு...? எதை நீ எடுத்துக் கொண்டாயோ அது இங்கிருந்தே எடுக்கப்பட்டது. எதைக் கொடுத்தாயோ அது இங்கேயே கொடுக்கப்பட்டது. எது இன்று உன்னுடையதோ... அது நாளை மற்றவரின் உடமையாகிறது. மற்றொரு நாள்**

**அது வேறு ஒருவரின் உடைமையாகிறது. இந்த மாற்றம் உலக நியதியாகும்...!**

வாசகங்களைப் படித்து அது சொல்லிக் கொடுத்த அர்த் தத்தில் உறைந்து போயிருந்த கதிர் கதவருகே சத்தம் கேட்டு திரும்பினான்.

ராம்கோபால் உள்ளே நுழைய - பின்னால் கபிலா தெரிந் தாள். போட்டோவில் பார்த்ததைக் காட்டிலும் சற்று வித் தியாசமாய் தென்பட்டாள். கண்களில் சின்னதாய் மருட்சி.

டாக்டர் சொன்னார்: ''இவர்தாம்மா கதிர்...! உன்னோட அப்பா உன்னைக் கூட்டிட்டுப் போறதுக்காக அனுப்பிச்சு வெச்சவர்...

கபிலா கைகளைக் குவித்தாள். கதிரும் பதிலுக்கு கைகளைக் குவித்தான். டாக்டர் சொன்னார்.

''இனிமே கபிலாவுக்கு எந்த ட்ரீட்மெண்ட்டும் அவசிய மில்லை... மருந்து மாத்திரை கூட எடுத்துக்க வேண்டாம்... தலையில மட்டும் மறுபடியும் அடிபடாதபடி கவனமா இருந்துட்டா போதும்...''

கபிலா சிரித்தாள்.

''ஐ... வில் டேக் கேர் டாக்டர்... இனிமே உங்களை ஃப்ரெண்ட் லியா பார்க்க மட்டும்தான் வருவேன்...

''தட்ஸ் குட்...

கதிர் கேட்டான்.

''நாங்க புறப்படலாமா டாக்டர்...?''

''தாராளமா...! இப்ப மணி மூணு பத்து. ஏர்போர்ட் போய்ச் சேர ஒரு மணி நேரமாயிடும்... ஃப்ளைட் அஞ்சரை மணிக்குத்தானே...?''

''ஆமா டாக்டர்...

அறையை விட்டு வெளியே வந்தார்கள். கபிலாவின் கையில் ஒரு சிறிய சூட்கேஸ் இருந்தது.

காம்பௌண்ட் கேட்டுக்கு வெளியே போய் காத்திருந்த டாக்ஸியில் ஏறிக் கொண்டார்கள். கபிலா பின் சீட்டில் உட்கார்ந்து கொள்ள கதிர் ட்ரைவர்க்கு பக்கத்தில் உட்கார்ந்தான்.

டாக்டர் ராம்கோபால் கையசைக்க டாக்ஸி புறப்பட்டது.

டாக்ஸி சிறிது நேரம் போனதுமே - கபிலா பேச்சை ஆரம்பித்தாள்.

''கதிர்! நீங்க கம்பெனியில் எந்த செக்ஷன்?''

''அட்மினிஷ்ட்ரேஷன்...

''ஆபீஸ்ல சேர்ந்து எவ்வளவு வருஷமாச்சு...?''

''ரெண்டு வருஷம்...

''உங்களுக்கு கல்யாணம்...?''

''ஆயிடுச்சு...

''நேட்டீவ் கோயமுத்தூர்தானா...?''

''ஆமா...

அதற்குப் பிறகு ஏர்போர்ட் போகும் வரைக்கும் கபிலா எதுவும் பேசவில்லை. ஒரு புத்தகத்தை பிரித்து வைத்துக் கொண்டு ஆழ்ந்து விட்டாள். கதிர் வெளியே வேடிக்கை பார்த்தான்.

வாகன நெரிசலில் டாக்ஸி நீந்தி ஏர்போர்ட்டுக்குள் நுழைந்தபோது நேரம் 4.15.

ட்ரைவர்க்கு பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டு - கதிர் தன் சூட்கேஸையும், கபிலாவின் சூட்கேஸையும் எடுத்துக் கொண்டான்.

"உள்ளே போலாங்களா மிஸ் கபிலா...

"ம்...

நடந்தார்கள்.

லௌன்ஞ் வந்தது. ஏதோ ஒரு விமானம் ரன்வேயில் இறங்கிக் கொண்டிருக்க - லௌன்ஞ்சில் கூட்டம் அதிகப்படியாய் தெரிந்தது. வரப்போகிற ஒரு வி.ஐ.பி.க்காக ஒரு கும்பல் ரோஜா மாலைகளோடு காத்திருந்தது. ஸ்பீக்கரில் அறிவிப்பு வரப்போகும் ஃப்ளைட்டைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தது. கூட்டத்தின் இடுக்குகளில் கிடைத்த வழிகளை உபயோகப்படுத்தி கதிர் முன்னால் நடக்க கபிலா பின் தொடர்ந்தாள்.

சற்று உள்ளே போனதும் பாலிவினைல் நாற்காலிகள் வரிசையாய் வர காலியாய் இருந்த ஒரு நாற்காலியைக் காட்டினான் கதிர்.

கபிலா நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே தலையசைக்க கதிர் சற்று தொலைவில் தெரிந்த ரிசப்ஷன் கௌண்டரை நோக்கிப் போனான். லௌன்ஞ்ச் முழுவதும் மெலிதான இரைச்சல். பெயிண்ட் அடித்த டெலிபோன் பூத்துக்களில் ஆட்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கதிர் கௌண்டரை நெருங்கி - உள்ளே இருந்த பெண்ணிடம் ஏதோ கேட்க முற்பட்ட விநாடி -

அவனுடைய தோளின் மேல் -

சூடாய் ஒரு கை விழுந்தது.

திரும்பினான்.

தலை முடியை ஒட்ட வெட்டி கனமான மீசை வைத்திருந்த அந்த ஆள் இறுக்கமான முகத்தோடு நின்றிருந்தான்.

''எஸ்... என்றான் கதிர்.

மீசை கூப்பிட்டது.

''ஒரு நிமிஷம்... அப்படி வர்றீங்களா?''

''எதுக்கு...?''

''வாங்க... சொல்றேன்...

''யார் நீங்க...?''

''போலீஸ் க்ரைம் ப்ராஞ்ச்...'' அந்த நபர் தன் பாக்கெட்டில் இருந்த உத்யோக அட்டையை எடுத்து கதிரின் முகத்துக்கு நேரே பிடித்தான்.



# 16



விவேக்கும் கோகுல்நாத்தும் ஜஸ்டீஸ் வாத்சல்யனின் வீட்டை நோக்கி ஜீப்பில் போய்க் கொண்டிருந்தார்கள்.

விவேக் கேட்டான்.

''வாத்சல்யன் குடும்பத்துல மொத்தம் எவ்வளவு மெம்பர்ஸ்...?''

''மூணு பேர்... நீதிபதியோட ஒய்ஃப் மனோகௌரி, மகன் ப்ரேம்குமார், மகள் ஹேமலதா...''

''எல்லார்க்கும் கல்யாணம் ஆயிடுச்சா...?''

''அந்தப் பொண்ணுக்கு மட்டும் ஆயிருக்கு...

பெசண்ட் நகரில் இருந்த வாத்சல்யனின் வீட்டை ஜீப் நெருங்கியபோது அந்தத் தெருவே கார்களால் நிரம்பி யிருந்தது. போஸ்ட் மார்ட்டம் முடிந்து வந்திருந்த வாத்சல்யனின் உடலுக்கு இறுதி மரியாதை செலுத்துவதற்காக பங்களாவின் முன்புறம் நிர்மாணிக்கப்பட்டிருந்த ஸாமினார் பந்தலுக்கு கீழே மடக்கு நாற்காலிகளில் பணக்கார முகங்கள் தெரிந்தன. நடுஹாலில் ரோஜா மாலைகளுக்கு மத்தியில் நாசித்துவாரங்களில் திணிக்கப்பட்ட பஞ்சோடு வாத்சல்யன் கிடத்தப்பட்டிருந்தார். தலைமாட்டில் ஒரு குத்து விளக்கு எரிய பெண்களின் லேசான அழுகை ஒலி காற்று மண்டலத்தில் கலந்திருந்தது.



விவேக்கும் கோகுல்நாத்தும் உள்ளே நுழைந்தார்கள்.

''கோகுல்நாத்! நான் இப்படி அந்த ஹைபிஸ்கஸ் செடிக்கு பக்கத்தில் நின்னுட்டிருக்கேன்... நீங்க உள்ளே போய் வாத்சல்யனோட சன் பிரேம் குமாரைக் கூட்டிட்டு வாங்க...

கோகுல்நாத் தலையாட்டிவிட்டு உள்ளே போனார்.

விவேக் அங்கிருந்த கும்பலில் தென்பட்ட முகங்களை உன்னிப்பாய் பார்த்து - கட் அவுட் பொத்தலில் தெரிந்த முகத்தோடு ஒப்பிட்டுப் பார்த்து பத்து நிமிஷங்களைக் கரைத் திருந்தபோது - கோகுல்நாத் அந்த நடுத்தர வயது மனிதரை கூட்டிக் கொண்டு வந்தார்.

அழுத கண்கள், கலைந்த தலை, வேஷ்டி சட்டையோடு தோளில் போட்ட துண்டு.

''விவேக்...! வாத்சல்யனோட சன் பிரேம்குமார் அப்பா இறந்த அதிர்ச்சியை தாங்கிக்க முடியாமே பிரமை பிடித்த மாதிரி உட்கார்ந்திருக்கார். ஜஸ்டீஸோட மனைவியும் மகளும் கூட இப்போ பேசக்கூடிய நிலைமையில் இல்லை. இவர் மிஸ்டர் பண்டரிநாதன். நீதிபதி வாத்சல்யனின் ப்ரதர். லாயரா

ப்ராக்டீஸ் பண்றார்... வாத்சல்யனுக்கு பாராட்டு விழா நடந்த இடத்துக்கு இவர்தான் கார்ல கொண்டு போய் விட்டிருக்கார்..."

விவேக் பண்டரிநாதனிடம் நிமிர்ந்தார்.

"எத்தனை மணிக்கு கார்ல கூட்டிட்டுப் போனீங்க?"

"எட்டு மணிக்கு...! ஏழரை மணி சுமார்க்கு அண்ணன் எனக்கு போன் பண்ணி அவரோட கார் ஒர்க் ஷாப்பிலிருந்து இன்னும் திரும்பாததால என்னோட காரைக் கொண்டு வரும் படி சொன்னார்..."

"உங்க வீடு எங்கே...?"

"ராயப்பேட்டையில...

"நீங்க கார்ல போனப்ப - உங்க காரை... யாராவது ஃபாலோ பண்ணினாங்களா...?"

"அப்படி ஏதும் தெரியலை...

"விழாவில் நீங்க கலந்துகிட்டீங்களா?"

"இல்லை... நான் ஒரு கல்யாணத்தை அட்டெண்ட் பண்ண வேண்டியிருந்ததால... அண்ணனை அங்கே ட்ராப் பண்ணிட்டு ரெண்டு மணி நேரம் கழிச்சு வர்றதா சொல்லிட்டுப் போயிட்டேன். ரெண்டு மணி நேரம் கழிச்சு வந்து பார்க்கும்போது - விழா நடந்த இடம் பூராவும் ஒரே போலீஸ் மயமா இருந்தது. விஷயம் தெரிஞ்சதும் ஆடிப் போயிட்டேன். காலையில் அண்ணனை கார்ல கூட்டிட்டுப் போகும் போதே - எம்மனசுல ஒரு சின்ன நெருடல் ஏற்பட்டது.

"என்ன நெருடல்...?"

"பொதுவா ஒருத்தர்க்கு பாராட்டு விழான்னு காலையில் பத்து மணிக்கு மேலேயோ... இல்லேன்னா... சாயந்தரம் அஞ்சு மணிக்கு மேலேயோதான் நடக்கிறது வழக்கம். ஆனா

அண்ணனுக்கு நடந்த பாராட்டு விழா ஒரு அன் டைமாக எட்டு மணிக்கு நடந்திருக்கு.

''இதைப் பத்தி ஜஸ்டீஸ் கிட்டே கேட்டீங்களா?''

''கேட்டேன்...

''என்ன சொன்னார்...?''

''விழாவில் கலந்துக்கிற டெலிகேட்ஸுக்கு காலையில் பதினோரு மணிக்கு ஃப்ளைட். பத்து மணிக்கெல்லாம் கூட்டத்தை முடிக்கணும்கிறதுக்காக எட்டு மணிக்கே கூட்டத்தை ஏற்பாடு பண்ணியிருக்கிறதா சொன்னார்...

விவேக் தன் கையில் வைத்திருந்த பிளாஸ்டிக் உறையிலிருந்து அந்தப் போட்டோவை எடுத்துக் காட்டினார்.

''இது வீடியோ கேஸட்டில் பதிவான முகம்.. அந்த முகத்தை போட்டோ எடுத்து க்ளோஸப் செய்து பிரிண்ட் போட்டோம். இந்த போட்டோவில் இருக்கிறவன் யார்ன்னு உங்களுக்கு அடையாளம் தெரியுதா...?''

பண்டரிநாதன் வாங்கிப் பார்ததுவிட்டு தலையாட்டினார். ''தெரியலையே...! அண்ணனைக் கொலை செய்தது இந்த ஆள்தானா...?''

''ஆமா...! இந்த போட்டோவில் இருக்கிறவன் ஒரு பழைய கிரிமினல் இல்லைங்கிற விஷயம் போலீஸ் ரிக்கார்ட்ஸ் மூலமா தெரிஞ்சிருக்கு இவன் புது ஆள். நீதிபதியோட ஃபேமிலிக்கு இவன் பரிச்சயமானவனாக்கூட இருக்கலாம்... அதான் போட்டோவைக் காட்டி விபரம் கேட்க வந்தோம்... இந்த சூழ்நிலையில் நீதிபதியோட ஃபேமிலியைச் சேர்ந்தவங்களை டிஸ்டர்ப் பண்றது சரியில்லைதான்... இருந்தாலும் இந்த போட்டோ பேர்வழி யார்ன்னு தெரிஞ்சா... விசாரணையை தீவிரப்படுத்தி ஆளை மடக்கறதுக்கு வசதியா இருக்கும்...''

பண்டரிநாதன் நிமிர்ந்தார். ''உங்க நிலைமை எனக்கும் புரியுது. உள்ளே வாங்க... அண்ணியையும், பிரேம் குமாரை யும் பார்த்து பேச ஏற்பாடு பண்றேன்...''

பண்டரிநாதன் பங்களாவின் பக்கவாட்டில் இருந்த ஒரு வழியாக விவேக்கையும் கோகுல்நாத்தையும் உள்ளே கூட்டிப் போய் - சமையலறையை ஒட்டிய மாதிரி இருந்த ஒரு அறைக்குள் உட்கார வைத்துவிட்டு ''ஒரு நிமிஷம்'' என்று சொல்லி நகர்ந்து போய் மனோ கௌரியையும், பிரேம் குமாரையும் கூட்டிக்கொண்டு வந்தார்.

இருவரும் அழுது அழுது தளர்ந்து போயிருந்தார்கள். கன்னங்களில் நீர்த்தடம் உலர்ந்து போயிருந்தது.

விவேக் போட்டோவைக் காட்டினான்.

"போட்டோவில் இருக்கிற ஆளை உங்களுக்குத் தெரியுமா?"

அவர்கள் பார்த்துவிட்டு ஒரே நேரத்தில் தலையாட்டி னார்கள்.

''தெரியலை

''எங்கேயாவது பார்த்த மாதிரி கூட இல்லையா?''

''இல்லை...

## 17




அந்த க்ரைம் ப்ராஞ்ச் ஆசாமி தன் உத்யோக உடையை கதிரின் முகத்துக்கு நேரே நீட்ட - கதிர் பார்த்துவிட்டு திடுக் கிட்டான்.

"எ... என்ன வி... விஷயம்...?"

"அப்படித் தனியாய்ப் போய் பேசலாமா...?"

"என்ன விஷயம்ன்னு...?"

"வாங்க சொல்றேன்...

"அந்த பொண்ணுகிட்டே சொல்லிட்டு வந்துடறேன்...

"அப்புறமா சொல்லிக்கலாம்... ஒரு அஞ்சு நிமிஷத்துல வந்துடலாம் வாங்க...

"வந்து...

"கம் வித்... மீ... மீசை சற்றே கடுமையான குரலில் சொல்ல - கதிர் பின் தொடர்ந்து நடந்தான். நடக்கும்போதே கபிலா உட்கார்ந்திருந்த இடத்தை திரும்பிப் பார்க்க - அவள் ரன்வேயில் நின்றிருந்த விமானத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

கதிரின் இருதயம் படபடத்தது.

'என்னிடம் எதை விசாரிக்க அந்த க்ரைம் ப்ராஞ்ச் ஆள் கூட்டிக் கொண்டு போகிறான்...?"

லௌன்ஞ்சின் கோடிக்குப் போக ஒரு போலீஸ் ஸெல் வந்தது. உள்ளே நுழைந்தார்கள்.

சிகரெட் புகையோடு இரண்டு போலீஸ் அதிகாரிகள் நாற் காலிகளுக்கு சாய்ந்திருக்க - மீசை கதவைத் தாழிட்டான்.

கதிர் ஏதும் புரியாமல் பார்க்க - இரண்டு அதிகாரிகளில் ஒருவர் எழுந்து - சிகரெட்டை ஆஸ்ட்ரேயில் தேய்த்து விட்டு - பூட்ஸ் சத்தம் ஒலிக்க பக்கத்தில் வந்தார். கேட்டார்.

"உன் பேர் என்ன...?"

"க... கதிர்...

அதிகாரி இன்னும் பக்கத்தில் வந்தார். சிகரெட் நாற்றம் முகத்தில் மோதியது.

''யார் சொல்லிக் கொடுத்து ஜஸ்டிஸ் வாத்சல்யனைக் கொலை பண்ணினே...?''

# 18



உச்சந்தலையில் இரும்புச் சுத்தியால் ஓங்கி அடி விழுந்த மாதிரி துடித்துப் போய் நிமிர்ந்தான் கதிர்.

நெற்றியில் உடனே ஒரு வியர்வைக்களம்.

''ஸ... ஸார்... எ... என்ன... சொ... சொல்றீங்க?''

''புரியலை...?'' அதிகாரி கோணலாய் புன்னகைத்தார்! ''கட் அவுட்டுக்குப் பின்னாடி மறைஞ்சு உட்கார்ந்து - சுட்டுட்டுப் போயிட்டா... யார்க்கும் தெரியாதுன்னு நினைச்சியா...?''

கதிரின் இருதயத்தில் இப்போது ஒரு பிரளயம்.

''கட்-அவுட்டுக்கு பின்னாடி உட்கார்ந்து சுட்டேனா...?''

''என்னடா ஒண்ணும் தெரியாத மாதிரி பாவ்லா பண்றே?'' கேட்டுக் கொண்டே எழுந்த இன்னொரு அதிகாரி எதிர் பார்க்காத நேரத்தில் கதிரின் முகத்தில் ஓங்கி அடித்தார்.

''ப்ப்ளீர்ர்...

கதிர் துடித்துப் போய் நிமிர - கண்களில் பூச்சி பறந்தது. மூக்குக் குள் எதுவோ உடைந்து - ரத்தம் வெது வெதுவென்று ஊறியது.

'அடிக்க ஆரம்பித்து விட்டார்கள்!'

கதிரின் அடி மனதில் ஒரு நகக்கை பிறாண்டியது.

''ம்... சொல்லுடா...

''ஸ... ஸார்... நீங்க என்னைத் தப்பா புரிஞ்சுகிட்டு யார் கிட்டயோ கேட்க வேண்டிய கேள்விகளை என்கிட்டே கேட்டுகிட்டு இருக்கீங்க...

மூக்கில் வழிந்த ரத்தத்தை இடது புறங்கையால் துடைத்த படியே அவசரக் குரலில் சொன்னான் கதிர்.

''என்ன சொன்னே...? யார்கிட்டயோ கேட்க வேண்டிய கேள்விகளை உன்கிட்டே கேட்டுகிட்டு இருக்கோமா... உன்னை யாருமே கண்டுபிடிக்க முடியாதுன்னு நினைச்சே... ஆனா உன்னோட போதாத காலம் விழா மேடைக்குப் பக்கத்தில் இருந்த ஒரு வீடியோ கிராஃபர் பார்வையில் நீ பட்டுட்டே... நீ கட் அவுட்டுக்கு பின்னாடி உட்கார்ந்து இருந்ததை - பொத்தல் வழியா தெரிஞ்ச உன்னோட முகம் காட்டிக் கொடுத்துடுச்சு... வீடியோ கிராஃபர் அந்தக் கட் அவுட் பொத்தலில் தெரிந்த உன்னோட முகத்தை காமிராவுக்குள்ளே கொண்டு வந்துட்டார். காஸட்ல கிடைச்ச உன் முகம் இப்போ போட்டோவா எங்க கையில. உன்னைப் பிடிக்கிறதுக்காக இந்த ஏர்போர்ட் மட்டும் இல்லை... ரயில்வே ஸ்டேஷன், பஸ் ஸ்டாண்ட் இப்படி எல்லாப் பக்கமும் போட்டோவை கையில வெச்சுகிட்டு போலீஸ் ஸ்க்வாட் காத்திட்டிருக்கு...

மூக்கில் வழிகிற ரத்தத்தோடு அதிர்ச்சியில் விழிகளை விரித்தான் கதிர்.

''போ... போட்டோவா?''

''ம்... பாரு...!''

க்ரைம் ப்ராஞ்ச் ஆசாமி - தன் சர்ட் பாக்கெட்டுக்குள் கையை நுழைத்து கார்டு சைஸ் போட்டோ ஒன்றை எடுத்தான்.

கதிரின் முகத்திற்கு நேரே நீட்டினான்.

''நல்லா பாரு...

கதிர் பார்த்தான்.

போட்டோவில் இருந்தது அவன்தான்.

# 19



**''ஸ**... ஸார்... இ... இது... இது...?'' கதிர் போட்டோவைப் பார்த்து பதற - அதிகாரி புன்னகைத்தார்.

''உன்னோட போட்டோ...! கட் அவுட்டுக்கு பின்னாடி நீ ஒளிஞ்சிட்டிருக்கும்போது - நீ குடுத்த போஸ் இது...

கதிர் வீறிட்டான்.

''ஸ... ஸ... ஸார்... இது... நானில்லை...

''என்னது... நீயில்லையா...?''

''ஆமா... ஸார்... இது என்னை மாதிரியே இருக்கிற வேற யாரோ...!'

கதிர் சொல்லி முடிக்கவில்லை. அவனுடைய அடி வயிற்றில் க்ரைம் ப்ராஞ்ச் ஆசாமியின் பூட்ஸ் கால் ஒரு துப்பாக்கி தோட்டா மாதிரி முழு வேகத்தோடு பாய்ந்தது.

"ஹ...!"

கதிர் வலி தாளாமல் இரண்டு கைகளாலும் வயிற்றைப் பற்றிக் கொண்டு முன் பக்கமாய் மடங்கி உட்கார்ந்தான். ஒரு சிறுநீரகம் வலியில் துடித்தது.

ஒரு அதிகாரி சுவரின் மூலைக்கு போய் சாத்தி வைத் திருந்த இரும்புப் பூண் போட்ட லாட்டியை எடுத்து வந்து மண்டியிட்டு உட்கார்ந்திருந்த கதிரின் முகத்தை நிமிர்த்தினார்.

"என்ன... சொன்னே... அந்த போட்டோவில் இருக்கிறது நீயில்லையா...?"

"நா... நான்... இல்ல ஸார்...

லாட்டியை ஒரு வீறு வீசினார். நாசித் துவாரங்களில் ததும்பி நின்ற ரத்தம் தெறித்தது.

கதிர் பெரிய அலறலோடு மல்லாந்து விழுந்தான். மார்பில் பூட்ஸ்கால் பதிந்தது. "வீணா... அடிபட்டு... ரத்தத்தைக் கொட்டாதே...! உண்மையைச் சொல்லிடு... ஜஸ்டீஸ் வாத்சல்யனைக் கொலை செய்ய உன்னை ஏவிவிட்டது யாரு...?"

"அ... அது... நானில்லை ஸார்...

பூட்ஸ் கால் வயிற்றுக்கு இறங்கியது.

"இதோ பார்... இப்படியே ஒரே மிதி... குடல் வாய் வழியா வெளியே வந்துடும்..."

கதிர் கைகளை உயர்த்தி அதிகாரியை சேவித்தான். "ஸ... ஸார்... நான் சொல்றதை நம்புங்க. ஸார். என் பேர் கதிர்... சொந்த ஊர் கோயமுத்தூர். 'கலாக்ஸி' கம்பெனியில் அஸிஸ்டெண்ட் ஏ.ஓ.வா. இருக்கேன்."

சொல்லச் சொல்லவே

பூட்ஸ் கால் அழுத்தியது.

"பொய்... பேசாதே...! உன் கூட வந்திருக்கிற பொண்ணு யாரு... உன் பொண்டாட்டியா...?"

"இ... இல்ல ஸ... ஸார்... என் முதலாளியோட என் கம்பெனி எம்.டி.யோட பொண்ணு..."

க்ரைம் ப்ராஞ்ச் ஆசாமியிடம் திரும்பினார் இரண்டு அதிகாரி களில் ஒருவர்.

"போய்... அந்தப் பொண்ணைக் கூட்டிட்டு வாங்க...

வெளியே போனார் அவர்.

பூட்ஸ் காலை அழுத்தியபடியே கதிரிடம் குனிந்தார் அதிகாரி. "உம்பேர் என்ன சொன்னே...?"

"க... கதிர்...

"மெட்ராஸ்ல எவ்வளவு நாளா தங்கியிருக்கே?"

"இன்னிக்கு காலையிலதான் கோயமுத்தூரிலிருந்து வந்தேன் ஸார்."

"எத்தனை மணிக்கு...?"

"ஏழு மணிக்கு...

"எதுக்காக மெட்ராஸ் வந்தே...?"

"அ... அது... வந்து... வந்து...

"சொல்லுடா... என்ன மென்னு முழுங்கறே.. எந்தப் பொய் சொல்லி சமாளிக்கலாம்ன்னு பார்க்கறியா...?"

கதிர் தயங்கினான்.

'கபிலா மனநோய் நல ஹாஸ்பிடலில் இருந்ததை சொல்ல லாமா... வேண்டாமா... கபிலா மென்டலி அஃபெக்டான

விஷயம் வெளியே தெரியக்கூடாதுன்னு எம்.டி. சொல்லி யிருக்காரே...?''

''அவன் முழிக்கிறதைப் பாருங்க... தலை மாட்டில் நின் றிருந்த அதிகாரி கதிரின் விலாவில் ஓங்கி உதைத்தார்.

''ஆ... ஆ... ஆ...!''

வீறிட்டு கத்திய கதிரின் நெஞ்சுக்குள் போய் எதுவோ சொருகிக் கொண்ட மாதிரி வலி பரவ கண்கள் இருட்டிக் கொண்டு வந்தது.

தற்காலிகமாய் ஒரு மயக்கத்துக்குப் போனான்.

''ஆள் மயக்கமாயிட்டான்...

''ஒரு டம்ளர் தண்ணியை மூஞ்சி மேலே ஊத்துங்க.. பெரிய கில்லாடியா இருப்பான் போலிருக்கு... அவன் போட்டோவையே பார்த்துட்டு தைரியமா அது நானில் லேன்னு சொல்றான்...

''இவனை இங்கே வெச்சு விசாரிச்சா உண்மை வெளியே வராது. லாக்கப்புக்கு கொண்டு போய் தலை கீழா கட்டி தொங்க விட்டு ஆசன வாய்ல ஷாக் கொடுத்தா... எல்லாத்தையும் ஒத்துக்குவான்...

டெலிபோன் அடித்தது.

அதிகாரிகளில் ஒருவர் போய் ரிஸீவரை எடுத்தார்.

''ஹலோ...

''ஏர்போர்ட் போலீஸ் ஸெல்...?'' மறுமுனையில் விவேக் கின் குரல் கேட்டதும் - அதிகாரி பவ்யத்துக்கு வந்தார்.

''ஸார்... நான் விஜிலன்ஸ் ராஜவேலு..

''ஏதாவது தகவல் உண்டா...?''

''ஜஸ்டீஸை சுட்டவன் மாட்டிகிட்டான் ஸார்...

''என்னது...?''

''ஆமா... ஸார்... ஒரு பொண்ணோடு ஏர்போர்ட்டுக்கு வந்து டாக்ஸியில் இறங்கும்போதே பார்த்துட்டோம்...''

''ஆளை அமுக்கிட்டீங்களா?''

''அமுக்கிட்டோம் ஸார்...

''என்ன சொல்றான்...?''

''ஜஸ்டீஸை அவன் சுடலையாம்... போட்டோவைக் காட்டினா அது நானில்லைன்னு சொல்றான்... கொஞ்சம் போலீஸ் மரியாதையைக் காட்டி விசாரிச்சோம்... ஆள் மயக்க மாயிட்டான்.''

''அவனை உடனே போலீஸ் ஹெட் க்வார்ட்டர்ஸுக்கு கொண்டு வாங்க...

''எஸ்... ஸார்...'' சொல்லி ரிஸீவரை வைத்த விநாடி -

க்ரைம் ப்ராஞ்ச் ஆசாமி உள்ளே வந்தார். அதிகாரி கேட்டார்.

''அந்தப் பொண்ணு எங்கே...?''

''அவளைக் காணோம் ஸார்...



## 20



**போ**லீஸ் ஹெட் க்வார்ட்டர்ஸ்.

உள்ளே இருந்த கருங்கல் செல்லுக்கு கதிர் மண்டியிட்டு உட்கார்த்தி வைக்கப்பட்டிருந்தான். எதிரில் விவேக் கோகுல்நாத். கதிரின் மூக்கும் உதடும் ரத்த கசிவோடு வீங்கி யிருந்தது. பூட்ஸ் காலால் மிதிபட்டு மிதிபட்டு வயிறும் முதுகும் களறிப் போயிருந்தது.

விவேக் கையில் வைத்திருந்த போட்டோவைக் காட்டி கதிரிடம் கேட்டான். ''இந்த போட்டோவில் இருக்கிறது நீ இல்லேன்னு சொல்றியா...?''

ஈனஸ்வரக் குரலில் ''ஆமா'' என்றான் கதிர்.

''உன்னோட பேர் கதிர். நீ கலாக்ஸி கம்பெனியில் வேலை பார்க்கிறே... சரி...! மெட்ராஸுக்கு எதுக்காக வந்தே...? ஏர்போர்ட்டுக்கு உன்கூட வந்த பொண்ணை இப்போ காணோமே...? இதுக்கெல்லாம் உன்னோட பதில் என்ன...?''

''நான் உண்மையைச் சொல்லிடறேன் ஸார்...

''சொல்லு...

''என்னோட கம்பெனி மானேஜிங் டைரக்டர் கங்காதரன் மெட்ராஸ் மனநோய் நல விடுதியில் இருக்கிற தன் பொண்ணு கபிலாவை... யார்க்கும் தெரியாதபடி கூட்டிட்டு வரச் சொன்னார்... கல்யாணமாக வேண்டிய பொண்ணு மென்ட்டல் ஹாஸ்பிடல்ல இருந்தாங்கிற விஷயம் வெளியே தெரிஞ்சா அவ வாழ்க்கை பாதிக்கப்படலாம்ன்னு நினைச்சு என்கிட்டே ரகசியமா அந்தப் பொறுப்பை ஒப்படைச்சார்... நானும் அந்தப் பொறுப்பை ஏத்துகிட்டு இன்னிக்கு காலை ஃப்ளைட்ல மெட்ராஸ் வந்தேன். மென்ட்டல் ஹாஸ்பிடல் டாக்டர் ராம்கோபாலுக்கு போன் பண்ணி பேசினேன். அவர் மத்தி யானம் மூணு மணிக்கு வந்து கபிலாவைக் கூட்டிட்டுப் போகும்படியா சொன்னார். அதே மாதிரி மூணு மணிக்கு போனேன். கபிலாவைக் கூட்டிகிட்டு ஏர்போர்ட்டுக்கு வந்தேன். வந்த இடத்துல போலீஸ் என்னை...''

அழுகையில் தொண்டை அடைத்தது கதிர்க்கு.

விவேக் கதிரையே சில விநாடிகளுக்கு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு கேட்டான்.

''டாக்டர் ராம்கோபாலோட போன் நெம்பர் என்ன?''

''எய்ட் டூ ஃபைவ்... செவன்... நைன்... ஃபைவ்.''

''கம்பெனி போன் நெம்பர்...?''

''த்ரீ டூ டபுள் சிக்ஸ் ஃபைவ்...

கோகுல்நாத் கதிர் சொன்ன டெலிபோன் எண்களைக் குறித்துக் கொண்டார். விவேக் கண்ணைக் காட்ட வெளியே போனார்.

அறைக்குள் சில விநாடிகள் நிலவிய மௌனத்திற்கு பிறகு விவேக் ஒரு ஸ்டூலை இழுத்துப் போட்டுக் கொண்டு கதிர்க்குப் பக்கத்தில் உட்கார்ந்தான்.

''இந்தப் போட்டோவில் இருக்கிறது நீ இல்லேன்னா சொல்றே...?''

''ஆமா... ஸார்...

''உனக்கு ப்ரதர்ஸ் யாராவது இருக்காங்களா?''

''இல்ல... நான் மட்டும்தான்..

''அப்பா அம்மா இருக்காங்களா...?''

''இறந்துட்டாங்க...

''உங்க அப்பாவுக்கு உன்னோட அம்மாவைத் தவிர வேற எந்தப் பெண் கிட்டேயாவது தொடர்பு இருந்திருக்கா...

''அப்படி ஏதும் இல்லை...

''உன்னோட அப்பா உயிரோட இருந்த காலத்துல மெட் ராஸ் வந்ததுண்டா...?''

''இல்லை...

ஸெல் வாசல் அருகே குரல் கேட்டது.

''ஸார்...

விவேக் திரும்பினான்.

விஜிலென்ஸ் ராஜவேலு நின்றிருந்தார். விவேக்கிற்கு ஒரு சல்யூட் கொடுத்துவிட்டு பக்கத்தில் வந்தார்.

''கோல்ட் ஸாண்ட் ஹோட்டலுக்கு போய் விசாரணை பண் ணீங்களா...?''

''பண்ணினேன் ஸார். ரூம் நெம்பர் டூ நாட் த்ரீயில் இந்த ஆள் தங்கியிருந்திருக்கான். ரூம்பாய் கிட்டே விசாரிச்சப்ப ஒரு தகவல் கிடைச்சது ஸார்...''

''என்ன...?''

''இவன் ரூம் எடுத்து தங்கின கொஞ்ச நேரத்துக்குள்ளே ஒரு பொண்ணு வந்து கதவைத் தட்டி ஏதோ பேசிட்டுப் போயிருக்கா..

விவேக் கதிரிடம் திரும்பினான்.

''யார் அந்தப் பொண்ணு...?''

கதிர் அவசரக் குரலில் சொன்னான். ''அந்தப் பொண்ணு யார்ன்னு எனக்குத் தெரியாது ஸார்... அதுக்கு முன்னாடி அந்த ரூம்ல தங்கியிருந்த யாரையோ கேட்டுகிட்டு வந்தா... நான் இல்லேன்னு சொன்னதும் போயிட்டா...

விஜிலென்ஸ் ராஜவேலு குறுக்கிட்டான். ''அந்த ரூம்பாய் அப்படிச் சொல்லலையே... வந்த பொண்ணும் நீயும்... சிரிச்சு சிரிச்சு பேசிட்டிருந்தீங்களாம்...

''அவன் பொய் சொல்றான் ஸார்...

''அவன் எதுக்காகப் பொய் சொல்லணும்...?''

''ஸார்... அந்த ரூம்பாய் லிக்கரும் லேடீஸும் வேணு மான்னு கேட்டான்.... நான் கோபப்பட்டு அவனை அடிச்சுட் டேன்... நான் அவனை அடிச்சதை மனசுல வெச்சுகிட்டு... அந்தக் கோபத்துல உங்ககிட்ட அப்படிச் சொல்லியிருக்கான்...

''ஷட்... அப்...!'' ராஜவேலு கர்ஜித்தார். ''எதைக் கேட் டாலும் ஒரு காரணத்தைச் சொல்லிட்டிருக்காதே... உன் கிட்டே ஏதோ தப்பு இருக்கு... அந்தத் தப்பை மறைக்கிறதுக் காக நீ முயற்சி பண்றே...''

''நோ... ஸார்...

''பேசாதே...!'' ராஜவேலு பூட்ஸ் காலை தூக்கிக் கொண்டு உதைக்க வர விவேக் தடுத்தான்.

''டோண்ட் லூஸ் யுவர் டெம்பர்...! இவன் ரொம்ப நேரத் துக்கு பொய் சொல்லி தப்பிக்க முடியாது. இவன் யாரு... இவனுக்குப் பின்னாடி இருக்கிற சக்தி எதுன்னு விடியறதுக் குள்ளே கண்டுபிடிச்சுடலாம்...''

கோகுல்நாத் உள்ளே வந்தார்.

விவேக் அவரை ஏறிட்டான்.

''போன் பண்ணி கேட்டீங்களா கோகுல்நாத்?''

''ரெண்டு போனுமே என்கேஜ்ட்... லைன் கிடைக்கலை... கொஞ்ச நேரம் கழிச்சுத்தான் ட்ரை பண்ணனும்...

ராஜவேலு பொருமினார். ''ஸார்...! இவனை என் பொறுப் புல விடுங்க... பத்தே நிமிஷத்துல... உண்மையை ஒத்துக்க வைக்கிறேன்... அப்பட்டமா மாட்டிக்கிட்ட பின்னாடியும்... ஏதும் தெரியாத மாதிரி ஒரு அப்பாவி மாதிரி ஆக்ட் பண்ணிட்டிருக்கான் ஸார்...''

கதிர் சகலமும் உலர்ந்து போய் - ராஜவேலுவையே பய மாய் பார்த்துக் கொண்டிருக்க -

செல்லின் வலதுபக்க சுவர் மூலையில் பொருத்தப்பட் டிருந்த டெலிபோன் முணுமுணுத்தது.

விவேக் போய் ரிஸீவரை எடுத்தான்.

“எஸ்...

ஹெட்க்வார்ட்டர்ஸின் முன் பக்கம் இருந்த சென்ட்ரி ஸெல்லிலிருந்து சீஃப் செக்யூரிடி ஆபீஸர் பேசினார்.

“ஸார்... கைது செய்யப்பட்ட கதிரை தேடிகிட்டு ஒரு பொண்ணு வந்திருக்கு... பேரு... கபிலான்னு சொல்லுது.”

## 21



விவேக் சென்டரி செல்லுக்கு துரித நடையில் போய் பார்க்க ஸ்டீல் நாற்காலியில் தலை குனிந்து உட்கார்ந்திருந்த கபிலா விவேக்கைப் பார்த்ததும் எழுந்தாள். முகத்தில் இருட்டு படிந்திருந்தது - கண்களில் கலவரம்.

விவேக் கேட்டான்.

“கதிர் கூட ஏர்போர்ட்டுக்கு வந்தது நீதானே...?”

“ஆ... ஆமா ஸார்...

“ஏர்போர்ட்ல உன்னைக் காணோம்னு சொன்னாங்களே?”

“அது... வந்து... திடீர்ன்னு...

''திடீர்ன்னு...?''

''மன்த்லி ப்ரீயட் ஆரம்பமாயிடுச்சு... இதை கதிர்கிட்டே சொல்லிட்டிருக்க முடியாது. அவர் ரிசப்ஷன் கௌண்டர்க்கு போய்ட்டு வர்றதுக்குள்ளே ஏர்போர்ட்டுக்கு வெளியே இருந்த ஒரு டிபார்ட்மெண்ட்டல் ஸ்டோர்ஸுக்கு போய் கேர் ப்ரீ வாங்கிட்டு டாய்லெட் ஸெல்லுக்கு போயிட்டேன்... நான் திரும்பி வந்து பார்க்கும்போது கதிர் ஏர்போர்ட் லௌன்ஞ்சில் இல்லை... கொஞ்ச நேரம் வெயிட் பண்ணிப் பார்த்து ஸ்பீக்கர்ல அறிவிப்பு கொடுக்கிறதுக்காக ஏர்போர்ட் ஆபீஸர் கிட்டே போனேன். அங்கே போனதும்தான் கதிர் போலீஸாலே கைது செய்யப்பட்டு இங்கே கொண்டு வந்திருக்கிறதா தெரிஞ்சது... உடனே புறப்பட்டு வர்றேன்... கதிரைக் கைது பண்ணக்கூடிய அளவுக்கு அவர் என்ன குற்றம் பண்ணினார்...?''

விவேக் கபிலாவையே - சில விநாடிகள் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு தன் பாக்கெட்டில் இருந்த போட்டோவை எடுத்து அவளிடம் காட்டிவிட்டுக் கேட்டான்.

''போட்டோவில் இருக்கிறது யாரு...?''

அவள் பார்த்துவிட்டுச் சொன்னாள்.

''கதிர்...

''ஆனா கதிர் இந்த போட்டோவைப் பார்த்துட்டு நாளில்லைன்னு சொல்றான்...

''ஏன் அப்படிச் சொல்றார்...?''

''காரணம்... இந்த போட்டோவில்... இருக்கிறவன் ஒரு கொலையாளி. இன்னிக்குக் காலையில் ஒரு நீதிபதியை சுட்டுக் கொன்னிருக்கான்.''

கபிலா திகைத்துவிட்டு - மெல்லிய குரலில் சொன்னாள். ''ஸார்... கதிர்தான் அந்தக் கொலையைப் பண்ணியிருக்கிற

தாய்... நீங்க நினைச்சு... அவரைக் கைது பண்ணியிருக்கீங்க... ஆனா கதிர் அந்தக் கொலையை பண்ணியிருக்க மாட்டார் ஸார்...''

''அப்படின்னா... இந்த போட்டோ...?''

''ஒரே மாதிரி ரெண்டு பேர் இருக்கலாமில்லையா...?''

''அந்த சாயல் இருக்கலாம்... ஆனா இவ்வளவு துல்லியமா ரெண்டு பேர் ஒரே மாதிரியாய் இருக்க முடியாது...?''

''ஸார்... கதிர் ஹார்ம்லஸ்...! மெண்டல் ஹாஸ்பிடலில் இருந்த என்னைக் கூட்டிட்டு போறதுக்காகத்தான்... கதிர் மெட்ராஸுக்கு வந்தார். எங்க அப்பாவுக்கு போன் பண்ணி இந்த விஷயத்தை நீங்க கன்ஃபார்ம் பண்ணிக்கலாம்...

விவேக் தன் கையில் இருந்த போட்டோவை மறுபடியும் பார்த்தான்.

'இது கதிரின் முகம்தான்!'

மனம் கற்பூரம் ஏற்றி சத்தியம் செய்தது.

# 22



மறுநாள் காலை பத்துமணி.

விஷயத்தைக் கேள்விப்பட்டு - கோவையிலிருந்து விமானம் மூலம் வந்திருந்த பாலகங்காதரனும் டாக்டர் ராம் கோபாலும் விவேக்கிற்கு முன்பாய் உட்கார்ந்தார்கள்.

பாலகங்காதரன் சொல்லிக் கொண்டிருந்தார். ''கதிர்க்கும் நீதிபதி கொலையுண்டதுக்கும் சம்பந்தம் இருக்கவே முடியாது. கதிரைப் பத்தி எனக்குத் தெரியும். ஹி ஈஸ் ஏ மேன் ஆஃப் பிரின்சிபல்ஸ்... அவர் ஒரு கொலையை பண்ணியிருப்பார்ன்னு... நினைச்சுக்கூட பார்க்க முடியாத ஒண்ணு...

விவேக் புன்னகைத்தான். ''நீங்க உங்க அபிப்பிராயத்தை சொல்லிட்டீங்க... உங்க கம்பெனியில் வேலை பார்க்கிற கதிர் நல்லவன் மாதிரி ஏன் நடிச்சிருக்கக் கூடாது...

''என்ன சொல்றீங்க... ஸார்...?''

''நேற்று... கதிர்... ஏழரை மணிக்கெல்லாம் மெட்ராஸ் வந்து சேர்ந்துட்டார்... நீதிபதி சுட்டுக் கொல்லப்பட்டதோ... எட்டே முக்கால் மணி சுமார்க்கு...! ஹோட்டலில் வந்து தங்கிய கதிர் நாட்டில் இருக்கிற தீய சக்திகளுக்கு ஆதரவா... யார்கிட்டயிருந்தோ பணத்தை வாங்கிட்டு... நீதிபதியைக் கச்சிதமா முடிச்சுட்டு ஒண்ணும் தெரியாத மாதிரி ஹோட்டல் அறைக்குத் திரும்பியிருக்கலாம். இல்லையா...?''

பாலகங்காதரனும், ராம்கோபாலும் திகைக்க விவேக் தொடர்ந்தான். ''கட் அவுட்டுக்கு பின்புறம் இருந்துகிட்டு காரியத்தை முடிச்ச கதிர் ஒரு வீடியோகிராபர் கிட்டே மாட்டிக்குவோம்ன்னு எதிர்பார்க்கலை... மெட்ராஸுக்கு உங்க காரியமா வந்த கதிர் பணத்துக்கு ஆசைப்பட்டு ஓவர் டைம் மாதிரி... இந்தக் கொலையை ஏன் பண்ணியிருக்கக் கூடாது...?''

பாலகங்காதரன் குழப்பமாய் நெற்றியைத் தேய்க்க விவேக் கையில் வைத்திருந்த போட்டோவைக் காட்டினான்.

''வீடியோ காஸட்டிலிருந்து எடுத்த போட்டோ இது... போட்டோ பொய் சொல்லுமா...?''

மௌனம்.

''இன்னொரு விஷயத்தையும் நீங்க கவனிக்கணும். கதிர் ஹோட்டலுக்கு வந்து தங்கிய கொஞ்ச நேரத்துக்குள் ஒரு பெண் அவரைப் பார்க்க வந்திருக்கா...

''அவளைத் தான் தனக்கு தெரியாதுன்னு கதிர் சொல்றாரே...?''

''கதிர் சொல்றதை எப்படி நம்பறது...? ஹோட்டல் ரூம் பாய் சொல்றதைப் பார்த்தா... கதிர்க்கும் அந்த பொண்ணுக்கும் ஏற்கனவே பரிச்சயம் இருந்திருக்குன்னு தெரியுது...

கோகுல்நாத் உள்ளே வந்தார். சொன்னார்.

''விவேக்! ஸெல்லில் இருக்கிற கதிரைப் பார்க்கிறதுக்காக ஜஸ்டீஸ் மனைவி மனோ கௌரி, மகன் பிரேம்குமார், ஜஸ்டீஸ் தம்பி பண்டரிநாதன் வந்திருக்காங்க... நீங்க போன் பண்ணியிருந்தீங்களாம்...?''

''ஆமா... போட்டோவில் பார்க்கிறதைக் காட்டிலும் நேர்ல ஆளைப் பார்த்தா அந்த ஆளைப் பத்தின தகவல் ஏதாவது ஞாபகத்துக்கு வரலாம். அதான் காலையிலேயே போன் பண்ணி பத்துமணி சுமார்க்கு இங்கே வரச் சொன்னேன்...

விவேக் அறையை விட்டு வெளியே வர - வராந்தாவில் மனோகௌரி, பிரேம்குமார், பண்டரிநாதன் நின்றிருந்தார்கள்.

''ஸாரி ஃபார்... த... டிஸ்டர்பன்ஸ்... கொலையாளி கையும் களவுமா மாட்டின பிறகும், கொலையைத் தான் பண்ணலைன்னு சொல்றான். அந்த ஆளை நீங்க பார்க்கணும்... அவன் எந்த சந்தர்ப்பத்திலாவது ஜஸ்டீஸைப் பார்க்க வீட்டுக்கு வந்திருக்கானான்னு சொல்லணும்.''

அவர்கள் தலையசைத்தார்கள்.

விவேக் ஹெட்க்வார்ட்டர்ஸுக்கு உள்ளே இருந்த - கதிர் அடைபட்டிருந்த ஸெல்லை நோக்கி கூட்டிப் போனான்.

ஐந்து நிமிஷ நடை.

செல் வந்தது.

சென்ட்ரி கான்ஸ்டபிள் கதவைத் திறந்துவிட உள்ளே நுழைந்தார்கள்.

சுவர்க்கு சாய்ந்து உட்கார்ந்திருந்த கதிர் உள்ளே வருபவர் களைக் கண்டு தொய்வாய் எழுந்து நின்றான். உதடுகளும் மூக்கும் இன்னமும் வீங்கி தெரிந்தது.

பண்டரிநாதன், பிரேம்குமார் கதிரையே முறைத்துக் கொண்டு நிற்க, மனோகௌரி மட்டும் கோபமான கண்களோடு கதிரை நெருங்கினாள்.

''ஏண்டா... அவரைக் கொன்னே...? அவர் உனக்கு என்ன பண்ணினார்...?''

கதிரின் உதடுகள் துடித்தது.

''நா... நான்... கொ.. கொலை... ப... பண்ணலை...

''பாவி...!'' மனோ கௌரி கதிரின் சட்டையைப் பிடித்து உசுப்பினாள். அவனை அறைய முற்பட்டபோது விவேக் தடுத்தான்.

''மேடம்! போலீஸ் அவனை நொறுக்கி எடுத்திருக்கு. அவன் உடம்புல அடிபடாத இடமே கிடையாது...! இந்த ஆளை எங்கேயாவது பார்த்திருக்கீங்களா...?''

''இல்லை... மனோகௌரி தலையாட்டினாள்.

''பிரேம்குமார் நீங்க...?''

''பார்த்ததில்லை...

''பண்டரிநாதன்... நீங்க...?''

உதட்டைப் பிதுக்கினார். ''பார்த்த ஞாபகமே இல்லை. நேத்திக்கு நீங்க காட்டின போட்டோவில் இருந்த அதே ஆள்தானே இவன்?''

''ஆமா...! ஆனா போட்டோவில் இருக்கிறது நானில்லைன்னு சொல்றான்.''

''போலீஸோட அஸ்ஸெம்ஷன் என்ன...?''

''எந்த முடிவுக்கும் வர முடியலை... இன்வெஸ்டிகேஷனை வேகப் படுத்தியிருக்கோம்... கதிர் வீட்டை சோதனை போட கோயமுத்தூர் போலீஸுக்கு தகவல் போயிருக்கு... இவன் சொன்னது உண்மையா பொய்யான்னு ரெண்டு நாள்ல தெரிஞ்சுடும்.

ஸெல்லை விட்டு வெளியே வந்தார்கள். ஜஸ்டீஸ் குடும் பத்தை காரில் ஏற்றி அனுப்பிவிட்டு திரும்பிய விவேக் கோகுல்நாத் கண்ட்ரோல் அறையிலிருந்து வேகவேகமாய் வெளிப்பட்டு தன்னை நோக்கி வருவதைப் பார்த்தான்.

அவர் பக்கத்தில் வந்தார்.

''என்ன கோகுல்நாத்...?''

''கோயமுத்தூர் போலீஸ்கிட்டயிருந்து கதிரைப் பற்றி ஒரு தகவல் வந்திருக்கு...

''என்ன...?''

''ரெண்டு வருஷங்களுக்கு முந்தி தமிழ்நாட்டில் 'BBS'ங்கிற பேர்ல ஒரு இயக்கம் இருந்ததும் அது மத்திய அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டதும் உங்களுக்குத் தெரியும் இல்லையா...?''

''தெரியும்...

''அந்த இயக்கத்துல கதிர் இருந்திருக்கான்.''

''ஈஸிட்...?''

"எஸ்... கோயமுத்தூர் போலீஸ் கதிர் வீட்டை சோதனை போட்டபோது அந்த BBS இயக்கத்தைச் சேர்ந்த ஒரு பேட்ஜும் சில நோட்டீஸ்களும் கிடைச்சிருக்கு... அதைப் பத்தி கதிரோட மனைவிகிட்ட விசாரிச்சப்ப தன் புருஷன் அந்த இயக்கத்துல இருந்ததை ஒத்துக்கிட்டாளாம்..."

"BBSன்னா... ப்ளட் பாய்லர்ஸ்தானே?"

"ஆமா... அந்த இயக்கம் தடை செய்யப்பட்ட பிறகு அதுல இருந்த உறுப்பினர்கள்ல பல பேர் வன்முறையாளர்களா மாறியிருக்காங்க. அதுல இந்தக் கதிரும் ஒருத்தனாய் இருக்கலாம்..."

"வாங்க..! கதிர் கிட்டே கேட்டுப் பார்த்துடலாம்...

போனார்கள்.

கதிர் அவர்களைப் பார்த்ததும் பயமாய் எழுந்து நின்றான். விவேக் அவன் தோளில் கை வைத்தபடி கேட்டான்.

"BBSன்னா... அர்த்தம் தெரியுமா...?"

"தெரியுமா, தெரியாதா...?"

"தெ... தெரியும்."

"சொல்லு...

"ப்ளட் பாய்லர்ஸ்."

"அது ஒரு தடை செய்யப்பட்ட இயக்கம், தெரியுமா?"

"தெ... தெரியும்...

"அந்த இயக்கத்துல நீ இருந்தியா?"

கதிர் மௌனம் சாதித்தான்.

"இருந்தியா... இல்லையா...?"

"இ... இருந்தேன்... ப்ளட் பாய்லர்ஸ் அமைப்பு உண்மையிலேயே ஒரு நல்ல இயக்கம். நாட்டில் நடக்கிற அநீதிகளைத் தட்டிக் கேட்கிற இயக்கம். ஆளுங்கட்சிக்கு அந்த இயக்கத்தைப் பிடிக்காத காரணத்தால் தடை பண்ணியிருக்கு..."

"கதிர் போட்டோவில் இருக்கிறது நானில்லைன்னு இன்னமும் நீ பொய் சொல்லிட்டிருக்க முடியாது... BBS இயக்கத்தில் நீ இருந்திருக்கேங்கிற ஒரு விஷயம் போதும். உடம்பை ரணமாக்கிக்காமே... போலீஸ் கிட்டே உண்மையைச் சொல்லிடறது உத்தமம்...

கதிர் தீர்க்கமாய் அலறினான்.

"ஸார்... சத்தியமா அந்த போட்டோவில் இருக்கிறது நானில்லை..."

"இதையே நீ ரொம்ப நேரத்துக்கு சொல்லிட்டிருக்க முடியாது...

விவேக் சொல்லிவிட்டு வெளியேறினான்.

## 23



கேஸட்டை டெக்கில் போட்டு - ஜஸ்டிஸ் வாத்சல்யனின் விழா மேடை நிகழ்ச்சிகளை திரும்பத் திரும்ப பார்த்துக் கொண்டிருந்தான் விவேக்.

இடம் அவனுடைய வீடு. நேரம் சாயந்தர ஆறு மணி. விவேக் உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு பின் பக்கமாய் வந்து

நின்று - அவனுடைய தோளின் மேல் கைளை ஊன்றிக் கொண்ட ரூபலா நீளமாய் பெருமூச்சொன்றை விட்டாள்.

''நீங்க ஆயிரம் தடவை பார்த்தாலும் இதே முகம்தான். அந்தக் கதிர் தான் தப்பிக்கிறதுக்காக பொய் சொல்லிட் டிருக்கான்.''

''இல்ல ரூபலா... அவன் பொய் சொல்ற மாதிரி எம்மன சுக்குப் படலை. போலீஸ் தோரணைக்காக அவன்தான் பண்ணியிருக்கணும்ன்னு நான் வெளியே சொன்னாலும் கதிர் அந்தக் கொலைக்கு காரணமில்லைன்னு தான் என் மன சுக்கு தோணுது...

''கதிர்க்கு கல்யாணமாயிருக்கா?''

''ம்... கல்யாணமாயிருக்கு.. ஒய்ப்'க்கு இது மாசம். கதிர் போலீஸ்ல மாட்டியிருக்கிற விஷயம் தெரிஞ்ச விநாடியி லிருந்து அவ சுயநினைவு இல்லாமே கிடக்கிறாளாம்...

டி.வி. திரையில் இப்போது கட்அவுட் தெரிய அது ஜூம் லென்ஸில் பக்கத்தில் வந்து - கட் அவுட் பொத்தலில் தெரிந்த முகத்தை க்ளோஸப்பில் காட்டியது.

விவேக் ரிமோட் கண்ட்ரோலை உபயோகப்படுத்தி அந்த முகத்தை திரையில் ஃப்ரீஸ் செய்ய - முகம் அப்படியே நின்றது.

''என்னத்தைச் சொல்ல... அதே முகம்தான்... துளிகூட வித்தியாசம் காட்டாத அச்சாய் அப்படியே கதிர் முகம். ஆனா இது நானில்லைன்னு சொல்றானே...?''

''என்னங்க...?''

''ம்...

''சினிமாவில் வந்த மாதிரி டபுள் ஆக்டிங்கா இருக்குமோ?''

''அதெல்லாம் சினிமாவுக்குத்தான் சாத்தியம். நடைமுறைக்கு ஒத்து வராது.''

''பின்னே எப்படி...?''

''யோசிக்கணும்...

வாசலில் காலிங் பெல் சத்தம் எழுந்தது.

''போய் யார்ன்னு பாரு ரூபி...

ரூபலா எழுந்து போய் கதவைத் திறக்க கோகுல்நாத் உள்ளே வந்தார். புன்னகைத்தார்.

''என்ன விவேக்... மறுபடியும் அந்த மூன்று விநாடி முகமா...? அவன் பொய் சொல்றான்... BBS இயக்கத்தில் இருந்திருக்கான். கையும் காலும் சும்மாயிருக்குமா...? எம்.டி. பொண்ணு கபிலாவைக் கூட்டிட்டுப் போக வந்தவன் எட்டு மணியிலிருந்து எட்டே முக்கால் மணிக்குள்ளே பார்ட் டைம் வேலையா இந்தக் கொலையை பண்ணிட்டு ஹோட்டல் ரூமுக்குள்ளே போய் உட்கார்ந்துட்டான். இப்போ தப்பிக்கிறதுக்காக...

விவேக் கத்தினான். ''ரூபலா... வாசல் கதவைச் சாத்தாதே... அப்படியே திறந்து வை...

சொல்லிக் கொண்டே டி.வி. திரையில் தெரிந்த அந்த முகத்தை உற்றுப் பார்த்தான்.

''கோகுல்நாத்! இப்படி வாங்க...

அவர் வந்தார்.

''இந்த கோணத்துல நின்னு அந்த முகத்தைப் பாருங்க...

கோகுல்நாத் பார்த்துவிட்டு நெற்றியைக் கீறிக் கொண்டார்.

''என்ன...?''

''அந்த முகத்துல ஒரு வித்தியாசம் தெரியலை...?''

''தெரியலையே...

''ரூபலா! வாசல்கதவை நல்லாத் திறந்து வை.''

திறந்து வைத்தாள்.

சாயந்தர சூரிய வெளிச்சம் - ஆரஞ்சு வண்ணமாய் - டி.வி. திரையின் மேல் விழ - திரையில் இருந்த முகம் விக்கித்தது.

''இப்ப பாருங்க கோகுல்நாத்.''

அவர் பார்த்தார். பார்த்த அடுத்த சில விநாடிகளுக்குள் கோகுல்நாத் முகம் ஒரு ஆச்சர்யத்துக்கு போயிற்று.

''விவேக்! முகத்தோட நெற்றி, கன்னம், மோவாய், மூக்கு வாய் இந்த பாகங்கள் பூராவும் ஏதோ கட்டம் போட்ட மாதிரி தெரியுது.''

''கரெக்ட்! கட்டம்தான்... முகம் அஞ்சு செக்மெண்டா பிரிச்ச மாதிரி தெரியுது...

''என்ன அது...?''

''இனிமேத்தான் பார்க்கணும்.''

''நேத்து இந்த செக்மெண்ட்ஸ் தெரியலையே...!''

விவேக் புன்னகைத்தான். ''சூரிய பகவானோட அருள் இல்லாமே இருந்திருந்தா... இன்னிக்கும் இந்த செக்மெண்ட்ஸ் தெரிஞ்சிருக்காது...!''

''என்ன சொல்றீங்க விவேக்...? சூரிய பகவானோட அருளா...?''

''ஆமா... சூரிய பகவானோட அருள்தான்...! உங்களுக்காக ரூபலா கதவைத் திறந்ததும் சூரியனோட சாயந்திர நேர

ஆரஞ்சு வெளிச்சம் டி.வி. ஸ்கீரினில் பட்டு - அந்த ஆரஞ்சு வெளிச்சத்தில் இருந்த இன்பெர்ரா சிவப்பு கதிர்கள் - ஸ்க்ரீன் காட்டிய அந்த முகத்தில் ஊடுருவியிருக்கு.''

கோகுல்நாத், ரூபலா சற்றே புரியாமல் பார்க்க விவேக் தொடர்ந்தான். ''புரியும்படியாவே சொல்றேன். த்ரீ டி சினிமாப் படங்களைப் பார்க்கும்போது - சில காட்சிகளோட முழு எஃபெக்ட்டும் தெரியறதுக்காக சிவப்புக் கண்ணாடியை மாட்டிக்கிறோம் இல்லையா?''

''ஆமா...

''அதே மாதிரிதான் அதுவும்... சாதாரண வெளிச்சத்தில் பார்க்கும்போது தெரியாது. அந்த முகத்தோட செக்மெண்ட்ஸ், சூரியனோட ஆரஞ்சு வெளிச்சத்தில் இருக்கிற 'இன்ஃபெர்ரா ரெட்ரோஸ் பட்டதும் தெரிஞ்சிருக்கு...''

''அந்த செக்மெண்ட்ஸ் என்ன...?''

''ஒரு முகத்து மேல இன்னொரு முகத்தை ஒட்ட வெச்சிருக்காங்க... இந்த விஷயத்தை ஃபாரன்சிக்குக்கு கொண்டு போனா... உண்மை வெளிச்சத்துக்கு வந்துடும்...''

# 24



அடுத்த அரைமணி நேரத்துக்குள் விவேக்கும் கோகுல் நாத்தும், ஃபாரன்ஸிக் துறையின் புதிய கட்டிடத்தில் சீப் ஆபீஸர்க்கு முன்பாய் உட்கார்ந்திருந்தார்கள். அறைக்குள் வேறு யாரும் இல்லை.

டெக்கில் காஸட் திணிக்கப்பட்டு - டி.வி. திரையில் அந்த முகம் தெரிந்ததும் எரிந்து கொண்டிருந்த ட்யூப் லைட் வெளிச்சத்தை அணைத்துவிட்டு சிவப்பு விளக்கு ஜீரோ வாட்ஸ் பல்பை எரிய விட்டார்கள்.

இன்ஃபெர்ராரோஸ் அடங்கிய சிவப்பு வெளிச்சம் பரவியதும் - டி.வி. திரையில் அந்த முகம் ஐந்து கட்டங்களாக பிரிக்கப்பட்டுத் தெரிந்தது. மெலிதான புள்ளிகளோடு கட்டங்கள் தெரிந்தன.

விவேக் ரிமோட் கண்ட்ரோலை உபயோகப்படுத்தி முகத்தை ஃப்ரீஸ் செய்ய ஃபாரன்ஸிக் சீஃப் ஆபீஸர் வியந்து போய் விவேக்கை ஏறிட்டார்.

''எக்ஸலண்ட் மிஸ்டர் விவேக்... திஸ் ஈஸ் கால்ட் போட்டோஃபிட் மோல்ட் ஃபிகர். சமீப காலங்களில்தான் இது பிரசித்தம்.''

விவேக் புருவ மத்தியைக் கீறினான்.

''புரியலையே...? வாட் ஈஸ் மென்ட் பை போட்டோ ஃபிட் மோல்ட் ஃபிகர்...?''

சீஃப் புன்னகைத்தார். ''இது ஒரு வகையான ப்ளாஸ்டிக் சர்ஜரி மாதிரிதான். ஆனா இது தற்காலிகமானது. ஆர்ட்டிபிஷியல் ஃப்ளஷ் ஜெல்லை உபயோகப்படுத்தி ஃபேஸ் மேக்கர் கம்ப்யூட்டர் மூலமா விரும்பின முகத்தை ஒருத்தர் முகத்து மேல ஒட்ட வைக்கலாம்... வேண்டாத போது அந்த முகத்தை அப்புறப்படுத்திக்கலாம்...

''நம்பவே கஷ்டமாயிருக்கு...

''நம்பியாகணும் மிஸ்டர் விவேக்... விஞ்ஞானம் இப்போ விபரீத திசையை நோக்கி போய்க்கிட்டிருக்கு.

“அப்படீன்னா... கதிரோட முகத்தைப் பயன்படுத்தி போட்டோ ஃபிட் மோல்ட் ஃபிகர் மூலமா - உருமாறி - நீதிபதியைக் கொலை பண்ணியிருக்கணும்...

‘‘எஸ்...

‘‘கொலையாளி இப்போ கதிரோட முகத்தை தன் முகத்தி லிருந்து அப்புறப்படுத்திட்டு - தன் சொந்த முகத்தோடு தைரிய மாக சுத்திக்கிட்டிருப்பான்.’’

‘‘சர்ட்டன்லி...

“எதேச்சையா மெட்ராஸுக்கு வந்த கதிர் இந்த விவ காரத்தில் மாட்டிக்கிட்டான்...

‘‘அதேதான்...

“மை குட்னஸ்...

‘‘கதிர் முகத்தை ஒட்ட வைத்துக் கொண்டிருக்கிற இந்தப் பேர்வழியோட முகம் எப்படியிருக்கும்ன்னு இப்போ பார்த் துடலாம்...

“எப்படி பார்க்க முடியும்?’’

“ஃபேஸ் ஐடென்டிஃபையர் கம்ப்யூட்டர் இருக்கே! இந்த போட்டோஃபிட் மோல்ட் ஃபிகரை அதில் ஃபீட் பண் ணினா பொய்யான முகத்தை கழுவி எடுத்துட்டு - உண்மை யான பயாலாஜிகல் ஃபிகரைக் காட்டும்... லெட் அஸ்ஸீ... கம்...

ஃபாரன்சிக் சீஃப் டெக்கில் இருந்த காஸெட்டை எடுத்துக் கொண்டு உள்ளே இருந்த கம்ப்யூட்டர் அறையை நோக்கிப் போக விவேக்கும் கோகுல்நாத்தும் பின் தொடர்ந்தார்கள்.



# 25



ஏர்க்கண்டிஷனரின் ஜில்லிப்புக்குள் உட்கார்ந்திருந்தது ஃபேஸ் ஐடென்டி ஃபையர் கம்ப்யூட்டர், ஃபைபர் உடம்பு. தாயகம் ஜெர்மனி. மானிட்டர் திரையோடு தயாராய் உழைக்கக் காத்திருந்தது.

ஃபாரன்ஸிக் சீஃப் காஸட்டில் பதிவான முகத்தை கம்ப் யூட்டர்க்கு கொடுக்க அது மானிட்டர் திரையில் முகத்தை பதித்து விட்டு கட்டளைகளை தேடித் தேடிக் கொடுத்தது.

முதல் பத்து விநாடிகள்...

மூக்கின் அமைப்பு மாறியது.

அடுத்த பத்து விநாடிகள்.

காதுகளின் வடிவம் சட்டென்று உருமாறி உதடுகள் வித விதமாக வரையப்பட்டு - நிச்சயமான உதடுகளோடு நின்றது.

முப்பதாவது விநாடி -

மோவாயும் நாற்பதாவது விநாடி நெற்றி மேடும் கன்னக் கதுப்புகளும் ஒரு தீர்மானத்துக்கு வந்தது.

ஒரு நிமிஷம் முடிவதற்குள் கம்ப்யூட்டர் சொல்லி விட்டது. "இவன்தான்யா... நீதிபதியைச் சுட்டுக் கொன்னது...!"

விவேக், கோகுல்நாத் மானிட்டர் திரையில் புது உருவம் எடுத்திருந்த அந்த முகத்தையே பார்த்தார்கள்.

முகம் அந்நியமாய் இருந்தது.

'யார் இவன்...?'

"இவன் பழைய கிரிமினலான்னு போலீஸ் ரிக்கார்ட்டை புரட்டிப் பார்க்கணும்... சொன்ன கோகுல்நாத்தை ஏறிட்டான் விவேக்.

"அதுக்கு முன்னாடி நீதிபதியோட மகன் பிரேம்குமாரை இங்கே வரவழைச்சு இந்த முகத்தைக் காட்டி யார்ன்னு கேட்கணும்... இது யார்ன்னு பிரேம்குமார்க்கு தெரிஞ்சிருந்தா... விஷயம் வெளியே போகாமே காதும் காதும் வெச்ச மாதிரி ஆளை மடக்கிடலாம்...

ஆமோதித்து தலையாட்டிய கோகுல்நாத் பக்கத்தில் இருந்த டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்துக் கொண்டு - ஜஸ்டீஸ் வீட்டுக்கு எண்களைத் தட்ட - ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது.

பேசியது பிரேம்குமார்தான்.

"ஹலோ... மிஸ்டர் பிரேம் குமார்... நான் இன்ஸ்பெக்டர் கோகுல்நாத்...

"சொல்லுங்க ஸார்...

"நீங்க நேர்ல வாங்க... ப்ளீஸ்... வீ... ஆர்... வெயிட்டிங் ஃபார்... யூ...

## 26




**ச**ரியாய் பதினைந்து நிமிஷம்.

பிரேம் குமார் ஃபாரன்ஸிக் டிபார்ட்மெண்டில் இருந்தான். விவேக் விஷயத்தை சொல்லி ஐடெண்டிஃபையர்

கம்ப்யூட்டரில் உருவத்தை போட்டு காட்ட - அவன் பார்த்து விட்டு தலையாட்டினான்.

"தெரியலை ஸார்...

"கொலையாளியோட உண்மையான முகம் இதுதான். இந்த முகத்து மேல்தான் கதிரோட முக அமைப்பை பொருத்தி விட்டு வந்து உங்க ஃபாதரைக் கொலை பண்ணியிருக்கான்..."

"அது சாத்தியமா ஸார்?"

"சாத்தியம்தான்னு ஃபாரன்ஸிக் சீஃப் சொல்றார்... கதிர் மேல கொலைப்பழி விழணும்ங்கிறதுக்காக - யாரோ திட்டம் போட்டு இந்தக் காரியத்தை பண்ணியிருக்காங்க..."

"அப்படீன்னா... கதிர்க்கு இந்த ஆள் யார்ன்னு தெரிஞ் சிருக்கலாமே...

"கதிரையும் இங்கே வரவழைக்க ஏற்பாடு பண்ணியிருக் கோம்..." சொன்ன விவேக் ஃபாரன்ஸிக் சீஃப்பை ஏறிட்டான்.

"இந்த போட்டோஃபிட் மோல்ட் ஃபிகர் கிட்டத்தட்ட ஒரு பிளாஸ்டிக் சர்ஜரி மாதிரிதானே?"

"ஆமா...

"எனக்கு தெரிஞ்ச பிளாஸ்டிக் சர்ஜன் ஒருத்தர் இருக்கார். அவர்கிட்டே இதைப் பத்தி டிஸ்கஸ் பண்ணிப் பார்க்கலாமா...?"

"தாராளமா...

விவேக் தன் சர்ட் பாக்கெட்டில் வைத்திருந்த சிறிய பாக் கெட் டயரியை எடுத்து - ஒரு நெம்பரைப் பார்த்து உதடுக்குள் சொல்லிக் கொண்டு ரிஸீவரை எடுத்து டயல் எண்களைத் தட்டினான். ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது.

"டாக்டர் விஜயராகவன்?"

''எஸ்.... ஹோல்டிங்.''

''டாக்டர்... நான் விவேக்...

''சர்ப்ரைஸ் போன் கால். எப்படியிருக்கீங்க மிஸ்டர் விவேக். பிஸி வித் எனி கேஸ்...?''

''எஸ். அது சம்பந்தமாய்தான் உங்களுக்கு போன் பண்ணி னேன்... ஒரு இன்பர்மேஷன் வேணும்...''

''ப்ளீஸ்...

''போட்டோஃபிட் மோல்ட் ஃபிகர் பிராஸஸைப் பத்தி கேள்விப் பட்டிருக்கீங்களா?''

''ம்... கேள்விப்பட்டிருக்கேன். ஒருத்தரோட முக அமைப்பை இன்னொருத்தர்க்கு தற்காலிகமா பொருத்திக்கிற ப்ராசஸ்... வெளி நாடுகள்ல இது பிரபலம்... இந்தியாவுக்குள்ளே இது நுழைஞ்சு ரெண்டு மூணு வருஷம் இருக்கும்...''

''தற்சமயம் மெட்ராஸ்ல இருக்கா...?''

''ஒரு சைனிஸ் டாக்டர் இந்த பிராஸஸைப் பண்றதா கேள்வி...

''யார் அந்த டாக்டர்...?''

''ஒரு நிமிஷம் லைன்ல இருங்க... டயரியில பேரைக் குறிச்சு வெச்ச ஞாபகம்...

விவேக் காத்திருந்தான்.

அரை நிமிஷம் முடிவதற்குள் -

டாக்டர் விஜயராகவனின் குரல் கேட்டது.

''அட்ரஸை நோட் பண்ணிக்குங்க மிஸ்டர் விவேக்... டாக்டர் லீ-யாங். ட்ராகன் ப்ளாஸ்டிக் சர்ஜரி சென்டர், பரங்கிமலை

கண்டோன்மெண்ட் செக்டார் - ஒன் ஒன் த்ரீ... டெலிபோன் நெம்பர் தெரியலை...

"நோ ப்ராப்ளம் டாக்டர்... தாங்க்யூ வெரி மச் ஃபார் யுவர் யூஸ்ஃபுல் இன்பர்மேஷன்ஸ்...

விவேக் ரிஸீவரை வைத்த விநாடி -

க்ரைம் விஜிலன்ஸ் ராஜவேலு கதிரை அழைத்துக் கொண்டு உள்ளே வந்தார். பார்வையில் இப்போது கடுமை இல்லை.

விவேக் கதிரின் தோள் மேல் கையை வைத்தபடி சொன்னான். "கதிர்! இந்த மானிட்டர் திரையில் இருக்கிற உருவத்தைப் பாரு... இவனை எங்கேயாவது நீ பார்த்திருக்கியா...?"

கதிர் சோர்ந்த கண்களால் பார்த்து விட்டு - மௌனமாய் தலையாட்டினான்.

"நல்லா... பாரு... உன்னோட முக அமைப்பை பொருத்தி கிட்டவன் இவன்... இவனை உனக்குத் தெரியாமே இருக்காது...!"

கதிர் உற்றுப் பார்த்துவிட்டு தலையாட்டினான்.

"தெரியலை ஸார்... இதுக்கு முந்தி இவனை நான் பார்த்ததே இல்லை...



## 27



பரங்கிமலை கண்டோன்மெண்ட் ஏரியா.

செக்டார் 113. நேரம் சாயந்திர ஏழே கால்.

விவேக் ஒரு பார்மஸிக் கடைக்கு முன் ஜீப்பை நிறுத்த கோகுல்நாத் எட்டிப் பார்த்து கடைக்காரனிடம் கேட்டார்.

"ட்ராகன் ப்ளாஸ்டிக் சர்ஜரி சென்டர் எங்கே?"

"இங்கேயிருந்து அஞ்சாவது கட் ஸார்"

ஜீப் போயிற்று.

கண்டோன்மென்ட் ஏரியா நிசப்தமாய் இருந்தது. ஜன நடமாட்டம் வெகு வெகு சொற்பம். தெரு விளக்குகள் இன்னும் எரியாததால் சாயந்திர இருட்டு இன்னமும் கெட்டியாகவே இருந்தது.

ரோட்டின் ஐந்தாவது கட் வந்தது.

ஜீப் திரும்பியது.

'கட்'டின் இரண்டு பக்கமும் சிப்ரஸ் மரங்கள். தள்ளித் தள்ளி வீடுகள்.

ஜீப் நூறு அடி தூரம் போனதுமே -

ட்ராகன் ப்ளாஸ்டிக் சர்ஜரி சென்டர் - வெள்ளை பெயிண்ட் எழுத்துக்கள் இரண்டு மரங்களுக்கு மத்தியில் தெரிய விவேக் ஜீப்பை ஓரமாய் நிறுத்தினான்.

இருவரும் இறங்கினார்கள்.

கட்டிட காம்பௌண்ட் திறந்து கிடக்க உள்ளே நுழைந் தார்கள். போர்டிகோவில் கார் தெரிந்தது. வீட்டின் பக்கவாட்டி லிருந்து நாய் குறைத்தது.

போர்டிகோ படியேறி

வாசல் கதவுக்கு முன்பாய் நின்று காலிங் பெல் பொத் தானை அழுத்துவதற்காக விரலை வைத்த போது கதவு திறந்திருப்பது தெரிந்தது.

விவேக் தள்ளினான்.

ஹால் விஸ்தாரமாய் தெரிந்தது.

சோபா தெரிந்தது.

சோபாவில் குள்ளமாய் அந்த சைனீஸ் உருவம் தெரிந்தது. மார்பில் உறைந்து போன ரத்தம். திறந்த கண்கள்.

டாக்டர் லீ-யாங் ரொம்ப மலிவாய் செத்திருந்தார்.

## 28



முந்திரி தோப்பு பங்களாவுக்கு முன்பாய் பைக்கை நிறுத்திவிட்டு உள்ளே போனான் ஸாம். நேரம் இரவு எட்டு.

ஜீரோவாட்ஸ் வெளிச்ச அறைக்குள் - ஸ்காட்ச் டம்ளரோடு உட்கார்ந்திருந்தார் அவர்.

ஸாமை பார்வையில் வாங்கியதும் கேட்டார்.

''என்ன டாக்டர் லீ-யாங்கை முடிச்சுட்டியா?''

''முடிக்காமே வருவேனா ஸார்?''

''துப்பாக்கியா கத்தியா...?''

''துப்பாக்கிதான்...

''யாரும் பார்த்துடலையே...?''

''அந்த கண்டோன்மெண்ட் ஏரியாவில் இருட்டிகிட்டு வர்ற அந்த நேரத்துல யார் ஸார் பார்க்கப் போறாங்க...?''

''டாக்டர் லீ-யாங் விவேக், கோகுல்நாத் கையில் மாட்டி யிருந்தா... அந்த ஆள் என்னைக் காட்டிக் கொடுக்கத் தயங்க மாட்டான். ஒழிச்சு கட்டினது உத்தமம்... இனி கேஸ் இருட்டுல

விழுந்துடும்... தேஜ் யார்ன்னு கண்டுபிடிக்க முடியாமே போலீஸ் ஒரே திசையை பார்த்துகிட்டு உட்கார்ந்திருக்கப் போகுது...''

ஸாம் தலையாட்ட-

அவர் ஸ்காட்ச்சை ஒரே மூச்சில் குடித்து விட்டு எழுந்தார்.

''ஸாம்... நான் கிளம்பறேன்... இனிமே ஜஸ்டீஸ் கொலைக் கேஸ் ஊமைச் சாமியார் மௌனம் மாதிரிதான்...

''ஸார்... காரை ஓட்டுவீங்களா?''

''நிதானத்துலதான் இருக்கேன் ஸாம்... நானே தப்பு பண்ணினாலும் கார் தப்பு பண்ணாது.. என்னோட அம்பாசிடர் பழகின குதிரை மாதிரி... பத்திரமா வீடு கொண்டு போய் சேர்த்துடும்...''

போர்டிகோவுக்கு வந்தார்.

''ஸாம்! பத்திரம்...! போன்ல என்னை எதுக்காகவும் காண்டாக்ட் பண்ணாதே... தினசரி ராத்திரி இந்நேரத்துக்கு இங்கே வர்றேன். பேச வேண்டியதைப் பேசிக்கலாம்...''

''சரி... ஸார்...

கார்க்குள் திணித்து ட்ரைவிங் சீட்டை ஆக்ரமித்து இக்னீஷியனை உசுப்பினார். அது 'சக் சக்' என்று உறுமி உயிர் பிடித்துக் கொண்டதும் நகர்த்தினார்.

''ஸாம் வரட்டா...

அவன் தலையாட்ட கார் வேகம் பிடித்தது. முந்திரி தோப்பின் இருட்டான பாதையை ஹெட்லைட் வெளிச்சத்தில் கடந்து - மகாபலிபுரச் சாலைக்கு வந்து சேர இரண்டு நிமிஷம் பிடித்தது.

ரோடு விரித்து போட்ட பாய் மாதிரி தெரிய ஆக்ஸி லேட்டரை அழுத்தினார்.

அம்பாஸிடர் காற்றில் பறக்கும் இலவம் பஞ்சானது.

முப்பது நிமிஷ பயணம்.

சென்னை நகர போக்குவரத்துக்குள் கார் சங்கமமாகி ராயப் பேட்டையில் இருக்கும் அவருடைய பங்களாவுக்குள் நுழைந்த போது -

நேரம் எட்டே முக்கால்.

காரினின்றும் இறங்கி போர்டிகோ படிகள் ஏறி உள்ளே போக - மனைவியின் இருள் கப்பிய முகம் தெரிந்தது.

''என்ன ஜெயந்தி...?'' என்று கேட்டபடி - அவளை நெருங் கியவர் திடுக்கிட்டார்.

ஹாலில் சோபாவில் பேப்பர் பார்த்துக் கொண்டு விவேக் கும் கோகுல்நாத்தும் தெரிந்தார்கள்.

விவேக் பேப்பரைத் தாழ்த்தி - மெல்லிய குரலில் சொன் னான்.

''வாங்க... பண்டரிநாதன்...!''

# 29



**ப**ண்டரிநாதன் மைக்ரோ விநாடி நேரம்தான் அதிர்ந்தார். உடனே அந்த அதிர்ச்சியை ஜீரணித்துக் கொண்டு புன்னகைத் தார்.

''வாங்க... மறுபடியும் ஏதாவது என்கொய்ரியா?''

''என்கொய்ரியெல்லாம் முடிஞ்சு கேஸ் ஒரு முடிவுக்கு வந்தாச்சு பண்டரிநாதன்...

''ஈஸிட்...? கொலையாளி யாரு...?''

''அதை நீங்கதான் சொல்லணும்...

''எ... என்னது நானா...?''

''எஸ்.... உங்க ப்ரதர் ஜஸ்டீஸ் வாத்சல்யனை கொலை செய்ய ஏற்பாடு பண்ணினது நீங்கதானே...?''

பண்டரிநாதன் அதிர்ச்சிக்குள் விழுந்து தத்தளித்தாலும் அதை முகத்தில் காட்டிக் கொள்ளாமல் இயல்பாய் கேட்டார்.

''என்ன உளர்றீங்க? என்னோட ப்ரதரை கொலை செய்ய நான் ஏற்பாடு பண்ணினேனா...?''

விவேக் எழுந்தான். ''பண்டரிநாதன்! நீங்க நடிச்சது போதும். நீங்க உங்க முந்திரி தோப்பு பங்களாவுக்குள்ளே இருக்கும் போதே உங்க மனைவிகிட்டே பாதி விசாரணையை முடிச்சு கிட்டோம். உங்க மனைவிக்கு ரொம்பவும் பயந்த சுபாவம். ஒரு லாயரா இருக்கிற நீங்க உங்க மனைவிக்கு போலீஸ் வந்தா எப்படி நடிக்கணும்ன்னு சொல்லித் தந்திருக்கக் கூடாதா?''

பண்டரிநாதன் திகைக்க கோகுல்நாத் தொடர்ந்தார்.

''உங்களை எப்படி நாங்க ஸ்மெல் பண்ணினோம்ன்னு தெரிஞ்சுக்க நீங்க ஆசைப்படலாம்... சைனீஸ் டாக்டர் லீ-யாங் கொலையானதுமே எங்களுக்கு முதல் முதலில் சந்தேகம் ஏற்பட்டது பிரேம்குமார் மேலதான். காரணம் போட்டோ ஃபிட் மோல்ட் பிகர் ப்ராஸஸ் பத்தி பிரேம்குமார்கிட்டதான் சொல்லியிருந்தோம். அது சம்பந்தமா அவரை விசாரிக்கப் போன போது பிரேம்குமார் கொடுத்த ஒரு தகவல் உங்க மேல சந்தேகப்பட வைத்தது.

இப்போது விவேக் தொடர்ந்தான். ''பிரேம்குமாரை ஃபாரன்ஸிக் கட்டிடத்துக்கு வரச் சொல்லி போன் பண்ணி யிருந்தோம். போன் பண்ணிப் பேசியது கோகுல்நாத். அவர் பேசும் போது பிரேம்குமார்கிட்டே போட்டோ ஃபிட் மோல்டட் ஃபிகர் ப்ராஸஸைப் பத்தி சொல்ல - அது சம்பந் தமா ஒரு ஆதாரம் கிடைச்சிருக்கிறதாய் குறிப்பிட்டிருக்கார். பிரேம்குமாரும் உடனே புறப்பட்டு வர வீட்டை விட்டுப் புறப்படும் போது - நீங்க போன் பண்ணியிருக்கீங்க. போனில் கேஸ் எவ்வளவு தூரத்தில் இருக்குன்னு நீங்க கேட்கப் போக

பிரேம்குமார் கொஞ்ச நேரத்துக்கு முந்தி கோகுல்நாத் போன் பண்ணி சொன்ன விஷயத்தை உங்ககிட்ட சொல்லி யிருக்கார். விஷயத்தைக் கேள்விப்பட்டதும் உங்களாலே சும்மாயிருக்க முடியமா...? போட்டோஃபிட் மோல்ட் பிகர் பிராஸஸ் விஷயம் எங்களுக்குத் தெரிஞ்சாச்சுன்னு உங்களுக்குத் தெரிஞ்சதும் உங்க மனசுக்குள்ளே ஒரு பயம். எங்க அடுத்த ஸ்டெப் டாக்டர் லீ-யாங்தான்னு தெரிஞ்சு அவரை நாங்க சந்திக்கிறதுக்கு முந்தி - நீங்க அவரைத் தீர்த்துக்கட்ட ஏற்பாடு பண்ணிட்டீங்க. போட்டோஃபிட் விவகாரம் எங்களுக்கு தெரிஞ்சது ஆறே கால் மணி சுமார்க்கு. அந்த விஷயம் எங்களுக்கு அடுத்தபடியா பிரேம்குமார்க்கும் பிரேம் குமார்க்கு அடுத்தபடியா உங்களுக்கும்தான் தெரிஞ்சிருக்கு... பிரேம் குமார் ஃபாரன்ஸிக் பில்டிங்கில் இருந்தார். வெளியே இருந்தது நீங்க மட்டும் தான்... ஸோ லீ-யாங்கோட மரணத் துக்கு காரணம் நீங்களாகத்தான் இருக்கணும்ங்கிற முடிவுக்கு வந்தோம். உடனே உங்க வீட்டுக்கு வந்தோம். நீங்க முந்திரித் தோப்பு பங்களாவுக்கு போயிருக்கிறதா உங்க மனைவி சொன்னாங்க. மிரட்டி கேள்விகளைக் கேட்டு வீட்டை சோதனை போட்டோம். டாய்லெட் க்ளாஸட்டிற்குள் வயர்லஸ் கருவிகள் பொருத்தப்பட்டிருந்ததைப் பார்த்தோம்... உங்க மனைவி சொன்ன பதில்களை வெச்சுப் பார்க்கும் போது - உங்களுக்கு உள்நாட்டில் இருக்கிற தீவிரவாத சக்திகளோடு தொடர்பு

இருக்குங்கிற உண்மையைத் தெரிஞ்சுகிட்டோம். பதினோரு தீவிரவாதிகளுக்கு தூக்குதண்டனை வழங்கிய - உங்க ப்ரதர் ஜஸ்டிஸை தீர்த்துக்கட்ட ஒரு பெரிய தொகையை தீவிர வாதிகள் கிட்டேயிருந்து வாங்கியிருக்கீங்க... வீட்டுக்குள்ளே மறைச்சு வைச்சிருந்த அந்தப் பணத்தையும் கைப்பற்றிட் டோம்...

''நோ... ஓ...ஓ...ஓ...!'' வீறிட்ட பண்டரிநாதன் சட்டென்று பின்னுக்கு நகர்ந்தபடியே - இடுப்பின் மறைவில் வைத்திருந்த துப்பாக்கியை எடுக்க -

'ச்ச்ச்த்த்...

விவேக் நான்கடி உயரத்துக்கு எம்பி - உடம்பின் மொத்த பலத்தையும் திரட்டி - வலது காலுக்கு கொடுத்து பண்டரி நாதனின் அடி வயிற்றில் எட்டி உதைக்க -

அவர் சுவர்க்கு மோதிக் கொண்டு மல்லாந்தார்.

விவேக் அவரைக் குப்பைக் கீரையாய் - அள்ளி வெளியே இழுத்துப் போய் பங்களாவின் பக்கவாட்டில் மறைவாய் இருந்த போலீஸ் ஜீப்புக்குள் திணித்தான்.

## 30



**போ**லீஸ் லாக்கப்

விவேக்-கோகுல்நாத்தின் ஆரம்ப போலீஸ் சிகிச்சை களுக்கே தாக்கு பிடிக்க முடியாமல் அவர்கள் கேட்ட கேள்வி களுக்கு உண்மைகளைச் சொல்ல ஆரம்பித்திருந்தார்.

''ஜஸ்டீஸை சுட்டது யாரு...?''

''அவன் பேர் தேவராஜ். நான் தேஜ்ன்னு அவனைக் கூப்பிடுவேன். என்கிட்டே வேலை பார்த்தவன்...

''கதிரோட முக அமைப்பை தேஜ்க்கு பொருத்த வேண்டிய அவசியம் என்ன...?''

''தேஜ் ரொம்பவும் பயந்தான். ஜஸ்டீஸை சுடும் போது யாராவது அவனைப் பார்த்துட்டா... அப்புறம் வாழ்நாள் பூராவும் வெளியே தலைகாட்ட முடியாதபடி ஆயிடும்ன்னு பயந்தான். டாக்டர் லீ-யாங் எனக்குத் தெரிஞ்சவர். தீவிரவாதிகளோட முக அமைப்புகளை போட்டோஃபிட் மோல்ட் பிகர் ப்ராஸஸ் மூலமா அடிக்கடி மாற்றி பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தவர். அவர்கிட்டே விஷயத்தை சொன்னதும் கதிர் போட்டோவை உபயோகப்படுத்தி தேஜோட முக அமைப்பை மாற்றினார்...

''டாக்டர் லீ-யாங்குக்கு கதிர் போட்டோ எப்படி கிடைச்சது...?''

''டாக்டர் லீ-யாங்குக்கு வேண்டிய நண்பர் ஒருத்தர் BBS இயக்கத்தில் மெம்பர். அவர் வெச்சிருந்த ஒரு போட்டோ ஆல்பம் லீ-யாங்குக்கு கிடைச்சது. அந்த ஆல்பத்தில் கதிர் போட்டோவும் இருந்தது. டாக்டர் லீ-யாங் அந்த போட்டோவை மாடலா வெச்சுகிட்டு - தேஜ் முகத்தை கதிர் முகமா போட்டோஃபிட் முறையில் மாத்தினார். இது எதேச்சையா நடந்தது. கதிர் யார்... அவர் எந்த ஊரில் இருக்கார்ன்னும் எங்களுக்கு தெரியாது. சம்பவம் நடக்கிற அன்னிக்கு கதிர் மெட்ராஸ் வரப்போறதும் எங்களுக்கு தெரியாது.

''சரி... இப்ப தேஜ் எங்கே...?''

''அவனை நேத்து காலையிலேயே பெட்ரோல் ஊத்திப் பொசுக்கிட்டோம்...''

பக்கத்து லாக்கப்பில் இருந்த ஸாமும் பண்டரிநாதன் சொன்ன மாதிரியே சொல்லிக் கொண்டிருக்க ஸ்டேட் மெண்ட்டை எடுத்து முடித்த விவேக்கும் கோகுல்நாத்தும் லாக்கப்பை விட்டு வெளியே வந்தார்கள்.

முன் அறை நாற்காலிகளில் பாலகங்காதரன், கபிலா, கதிர் உட்கார்ந்திருந்தார்கள். விவேக்கைப் பார்த்ததும் எழுந் தார்கள்.

பாலகங்காதரன் கேட்டார்.

''நாங்க கோயமுத்தூர் புறப்பட்டுப் போகலாமா?''

''தாராளமா போலாம்'' புன்னகைத்த விவேக் கதிரின் தோளை மெல்லத் தட்டினான். ''ஸாரி மிஸ்டர் கதிர்...! உண்மையைப் புரிஞ்சுக்காமே போலீஸ் உங்க கிட்டே ரொம்பவும் கடுமையா நடந்துகிட்டாங்க... போலீஸ் சார்பில நான் மன்னிப்பு கேட்டுக்கிறேன்...

கதிர் வீங்கிய உதடுகளோடு சிரித்தான்.

''இட்ஸ் ஆல்ரைட் ஸார்...

பாலகங்காதரன் தயக்கமாய் விவேக்கை ஏறிட்டார்.

''வந்து... ஒரு விஷயம்...

விவேக் கையமர்த்தினான். ''தெரியும்... இந்த கேஸில் உங்க பெண் கபிலா பேர் அடிபடாமே பார்த்துக்க வேண் டியது என்னோட பொறுப்பு... அதைப் பத்தி நீங்க கவலையே படவேண்டாம்...

''தாங்க்ஸ்'' கபிலாவின் கண்களில் நீர் கோர்த்துக் கொள்ள விவேக்கை நமஸ்கரித்தாள்.



